வ்யவஹாரங்கள் எங்கும் காண்கையாலே, இவ்விஷயத்தை க்ரஹிப்பதானதொரு ஜ்ஞானத்திற்குத் தான் ஆச்ரயமென்னுமிடம் நன்கு தெரிகின்றதன்றோ.

### ஜீவாத்மாவின் கர்த்ருத்வ போக்த்ருத்வங்கள்

7. ஆத்மாவை ஜ்ஞாதாவென்று தெரிந்துகொண்ட போதே கர்த்தாவென்றும் போக்தாவென்றும் தெரிந்துகொள்ளவேணும். இன்னது ஹேயம், இன்னது உபாதேயம் என்கிற ப்ரதிபத்திக்கு ஜ்ஞாத்ருத்வமானது ஹேதுவாயிருக்குமாகையாலே ஹேயங்களை விடுகையிலும் உபாதேயங்களைப் பற்றுகையிலும் சிகீர்ஷையுண்டாகி [முயற்சியுண்டாகி என்றபடி] அம்முயற்சி அடியாகக் கர்த்ருத்வமுண்டாகிறது. எவன் ஒரு காரியத்தைச் செய்கிறானோ அவன் அதனாலுண்டாகும் பலனை யனுபவிப்பவனுமாகிறான். ஆகவே கர்த்தாவானபோதே போக்தாவாகிறான். ஆன பின்பு ஆத்மாவுக்கு ஜ்ஞாத்ருத்வம் சொன்னது கர்த்ருத்வ போக்த்ருத்வங்களும் சொன்னபடியாகக் குறையில்லை. இப்படி ஆத்மாவுக்கு ஸ்வாபாவிகமா யிருந்துள்ள கர்த்ருத்வத்தை ஸாங்க்யர்கள் ப்ரக்ருதிக்கேயுள்ளதாகக் கொள்ளுகின்றார்கள்; அது பிசகு. ப்ரக்ருதிக்கே கர்த்ருத்வமாய் ஆத்மாவுக்கு அஃதில்லையாகில் ஆத்மாவுக்கு சாஸ்த்ர வச்யத்வமும் போக்த்ருத்வமும் குலைந்ததாகும், சாஸ்த்ர வச்யத்வமாவது—விதி நிஷேத ரூபமான சாஸ்த்ரத்துக்குத் தான் அதிகாரியாய்க்கொண்டு அதின் வசத்திலே நடக்கவேண்டுகையாம். சாஸ்த்ரங்களானவை ஒருபுறத்திலே 'இதைச் செய், இதைச் செய்' என்று கர்த்தவ்யங்களை விதிக்கும்; மற்றொருபுறத்திலே 'இதைச் செய்யாதே, இதைச் செய்யாதே' என்று நிஷித்தங்களை விலக்கும். இத்தகைய விதி நிஷேதங்கள் சேதநனைப்பற்றி அவதரித்தனவே யல்லது ப்ரக்ருதியைப்பற்றி அவதரித்தனவல்ல. ப்ரக்ருதிக்கேதான் கர்த்ருத்வமென்னில் சாஸ்த்ரங்களில் காணும் விதி நிஷேதங்கள் ப்ரக்ருதியை நோக்கியவை யென்ன வேணும். ஆகவே சாஸ்த்ரவச்யத்வம் சேதநனுக்குக் குலைந்ததாகும். அன்றியும், விஹிதங்களான ஸத்கருமங்களைச் செய்து, நிஷித்தங்களான துஷ்கருமங்களை விலக்கி வர்த்திக்கின்ற சேதநன் நல்ல பலன்களை யநுபவிக்கையும், விஹிதங்களை விட்டு நிஷித்தங்களைச் செய்து திரியும் சேதநன் தீய பலன்களை யனுபவிக்கையும் ஸர்வ ஸம்ப்ரதிபந்நமா யிருக்கின்றது; இப்படிப்பட்ட ஸுக துக்க ரூப பல போக்த்ருத்வமும் சேராமற் போகும். பல சொல்லி என்? சேதநன் கர்த்தாவாகாதபோது சாஸ்த்ரமே வீண் என்ன வேண்டிவரும். ஆனால் இந்த சேதநனுக்கு எல்லா விதமான கர்த்ருத்வமும் ஸ்வரூப ப்ரயுக்தமாமோ வென்னில்; அன்னபாநாதிகளான லௌகிக போகங்களை யுத்தேசித்துப் பண்ணும் ஸ்வவ்யாபாரங்களில் கர்த்ருத்வம் ஔபாதிகமாகையாலே ஸ்வரூப ப்ரயுக்தமன்று. ஆனால். அது இவனுக்கு வந்தபடி தான் என்னென்னில் ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களாகிற குணங்களினுடைய ஸம்ஸர்க்கத்தாலே யுண்டானதென்று சாஸ்த்ரம் சொல்லும்.

### ஆத்மாவுக்குச் சொன்ன கர்த்ருத்வம் ஈச்வராதீனமென்று முதலித்தல்

8. இனி இந்த கர்த்ருத்வமானது ஸ்வாதீநமா? பராதீனமா? என்கிற சங்கையிலே சொல்லவேண்டியவை சொல்லப்படுகின்றன. ஆத்மாவின் கர்த்ருத்வம் ஈச்வராதீநமென்று நிரூபிக்கப்படுகிறது. சாஸ்த்ரம் அர்த்தவத்தாக வேண்டியதற்காக கர்த்ருத்வம் ஆத்ம தர்மமென்று கொள்ளவேணும். அந்த கர்த்தாவுக்கு தர்மமான ஜ்ஞானம் இச்சை ப்ரயத்நம் ஆகிறவிவை பகவானுக்கு அதீனங்களா யிருக்கையாலும், பகவானுடைய அநுமதியில்லாமல் அந்த ஞானம் முதலியவை க்ரியாஹேதுவாக மாட்டாமையாலும் இவனுடைய கர்த்ருத்வம் ஈச்வராதீநமென்று கொள்ளவேணும். இங்ஙனே கொண்டால் புண்யபாபங்கள் ஈச்வரனுக்கேயாக வேண்டாவோ? சேதநனுக்கு ஆக இடமில்லையே! என்கிற சங்கை உதிக்

கக்கூடும். "சேதநனுடைய புத்திமூலமான ப்ரயத்நத்தை யபேக்ஷித்து ஈச்வரன் அநுமதி பண்ணுகையாலே அந்த க்ரியையைப்பற்றி வரும் புண்ய பாபங்களும் சேதநனுக்கே யாகின்றன" என்று நம் பூர்வாசாரியர்கள் அருளிச் செய்கின்றனர். ப்ரஹ்ம ஸூத்ரத்தில் *பராத் து தச் ச்ருதே:* என்கிற ஸூத்ரத்தினால் ஆத்மாவினுடைய கர்த்ருத்வம் பராயத்தமென்று சொல்லப்பட்டிருப்பதும், *க்ருதப்ரயத்நாபேக்ஷஸ் து விஹிதப்ரதிஷித்த அவையர்த்யாதிப்ய:* என்கிற ஸூத்ரத்தினால் சங்கா பரிஹாரம் செய்யப்பட்டிருப்பதும் குறிக்கொள்ளத் தக்கது. விதி நிஷேத சாஸ்த்ரங்கள் வீணாகாமைக்காக இச்சேதநன் பண்ணின ப்ரதம ப்ரயத்நத்தை யபேக்ஷித்துக்கொண்டு ஈச்வரன் ப்ரவர்த்திப்பிக்கிறானென்றதாயிற்று.

### ஆத்மாவின் அந்தரங்க நிரூபக நிரூபணம்

9. ஆத்மாவுக்கு ஜ்ஞாத்ருத்வத்திற் காட்டிலும் சேஷத்வமே முக்கியமென்பது குறிக்கொள்ளத்தக்கது. இவ்விஷயத்தைக் கூரத்தாழ்வான் திருக்கோட்டியூர் நம்பிபக்கலிலே ஆறுமாஸம் ஸேவித்திருந்து நிதியாகப் பெற்று எம்பெருமானார்க்கு விண்ணப்பம் செய்தார். இப் பரமார்த்தத்தை எம்பெருமானார் கீதாபாஷ்யத்திலே (ஏழாமத்யாயத்திலே) ஜ்ஞாநீ என்னு மதிகாரியை விவரித்தருளுமிடத்தில் "பகவச் சேஷதைகரஸ ஆத்மஸ்வரூபவித்" என்கிற ஸ்ரீ ஸூக்தியாலே யருளிச்செய்தார். ஈச்வர ஸ்வரூபத்தை யறிந்தவன் ஜ்ஞானியென்று சங்கரபாஷ்யத்திலுள்ளது. அதைத் தள்ளி எம்பெருமானார் "பகவச் சேஷதைகரஸ" த்யாதியை யருளிச்செய்தது திருவாய்மொழியில் (8-8-2) *அடியேனுள்ளா னென்ற சந்தையிலுள்ள நிதியான விசேஷத்தைத் திருவுள்ளம்பற்றியே யென்பதை குருமுகமாக் விரியக்கேட்டுணர்வது. ஆத்ம ஸ்வரூபம் பத்தர் முக்தர் நித்யர் என்று மூன்று படிப்பட்டிருக்கு மென்பதும் மூவகைப் பட்ட ஆத்மவர்க்கமும் தனித்தனியே அனந்தமா யிருக்குமென்பதும் அறியத்தக்கவை.

### அசித்தத்வத்தின் பாகுபாடு

10. இனி அசேதந தத்வத்தைப்பற்றி அதி ஸம்க்ஷேபமாக விஜ்ஞாபிக்கிறேன். அசேதநமென்றாலும் அசித்து என்றாலும் பரியாயமே யென்று ஏற்கெனவே தெரிவிக்கப் பட்டது. அறிவற்றதாய் விகாரப்பட்டுக்கொண்டே யிருப்பது அசித்தெனப்படும். இது சுத்தஸத்வமென்றும் மிச்ரஸத்வமென்றும் ஸத்வசூன்யமென்றும் மூன்று வகைப்படும். சுத்த ஸத்வமென்பது பரமபதம். அது அசேதன கோடியிற் சேர்ந்தாலும் ஜடமாக இருக்கவேணு மென்கிற நிர்ப்பந்தமில்லை. அஜடமென்று கொள்ளலாம். ஜடமென்று கொள்ளுகிற பக்ஷமுமொன்றுண்டு; தத்வ முக்தாகலாபத்தில் *இஹ ஜடாம் ஆதிமாம் கேசிதாஹு:* என்றார் வேதாந்த வாசிரியர். மிச்ரஸத்வமாவது ப்ரக்ருதி. இது ரஜோகுணத்தோடும் தமோகுணத் தோடுங் கூடின ஸத்வகுணத்தை யுடைத்தாகையாலே இது மிச்ரஸத்வ மென்னப்படுகிறது. ஸம்ஸாரி சேதனர்களின் ஞானத்தையும் ஆனந்தத்தையும் மறைக்குமிது. விபரீத ஞானத் தையு முண்டாக்கும். எம்பெருமானுடைய லீலைக்கு இது பரிகரமா யிருக்கும். இதையிட்டே லீலா விபூதியென்பது. ப்ரக்ருதி யென்கிற பெயரோடுகூட அவித்யை மாயை என்கிற பெயர் களுமுண்டு இதற்கு. ஆச்சரியமான ஸ்ருஷ்டியைப் பண்ணுவதால் மாயை யென்கிறது.

### ஸத்வசூன்யமென்கிற காலத்தைப்பற்றின நிரூபணம்

11. ஸத்வ சூந்யமென்று மூன்றாவதாகச் சொல்லப்பட்ட அசித்தத்வமாவது காலம். ப்ரக்ருதியினுடையவும் ப்ராக்ருதங்களினுடையவும் பரிணாமத்திற்கு இது ஹேதுவாயிருக்கும். அதாவது, எம்பெருமான் தன்னுடைய ஸங்கல்பத்தாலே இவற்றைப் பரிணமிக்கச் செய்கிற போது காலத்தினுடைய அவஸ்தா விசேஷங்களைப் பார்த்துக்கொண்டிருந்து அவ்வக் காலங்கள் வந்தவாறே பரிணாம நிர்வாஹம் செய்து போருகையாலே இதற்குக் காலம் அவச்யாபேக்ஷிதமா யிருக்குமென்று கொள்க. சிலர் காலமென்பதே கிடையாதென்றார்கள். ஸ்தாவர

ஜங்கம ரூபங்களான ஸகல பதார்த்தங்களும் காலத்தினுலாய பரிணுமமுள்ளனவர்களே கட்டடாகக் காணப்படுதலாலும், கலாகாஷ்டா முஹூர்த்தாதிகளைப்பற்றியும், வஸந்தம் முதலான ருதுக்களைப்பற்றியும், மதுமாதவாதி மாஸங்களைப்பற்றியும், மற்றும் இவற்றைச் சேர்ந்த பலவற்றைப்பற்றியும் வேதங்களிற் சொல்லுகையாலும் காலத்தை இல்லை செய்வது கூடாது. திக்குஎன்று தனியேஒருத்ரவ்ய முண்டென்று பலர் சொல்லுவது அயுக்தம்.

## இருபத்துநான்கு தத்வ நிருபணம்

12. முக்கியமாக, அவித்யை யென்றும், மாயையென்றும் சொல்லப்படுகிற ப்ரக்ருதி யானது இருபத்துநான்கு தத்துவமா யிருக்கும். (அவற்றின் விவரணம்) சப்தாதி விஷயங்கள் ஐந்து; ஆகாசாதி பூதங்கள் ஐந்து; பஞ்ச ஜ்ஞானேந்திரியங்கள், பஞ்ச கருமேந்திரியங்கள், இவற்றுக்கு ஸஹகாரியான மனஸ்ஸு. மஹான் அஹங்காரம் ப்ரக்ருதி என்பனவாம். திருவாய்மொழியில் *பொங்கைம்புலனும் பொறியைந்தும் கருமேந்திரிய மைம்பூதம், இங் கிவ்வுயிரேய் பிரகிருதி மானங்கார மனங்களே *என்கிற பாசுரத்தை யநுஸந்திப்பது. இவை, போக்யம் போகோப கரணம் போகஸ்தானம் என்று மூவகையா யிருக்கும். விஷயங்கள் போக்யங்களாம். செவி வாய் கண் மூக்கு முதலானவை போகோபகரணங்களாம். பதினுன்கு லோகங்களும் ஸகலதேஹங்களும் போகஸ்தானங்களாம். அசித்ஸ்வரூப நிரூபணமாயிற்று.*

## ஈச்வர தத்வ நிருபணம்

13. கீழே நிரூபித்த சேதநா சேதநங்களுக்கு நியாமகனுனவன் ஈச்வரனென்றும் ஸர் வேச்வரனென்றும் சொல்லப்படுவன். விஷ்ணு நாராயண வாஸுதேவாதிகளான திருநாமங் களினுல் சொல்லப்படுவன். *தேவோ நாமஸஹஸ்ரவாந்' என்றும், *ஓராயிரமா யுலகே ழளிக்கும் பேராயிரங்கொண்டதோர் பீடுடையன்* என்றும் சொல்லுகிறபடியே ஆயிரந் திருநாமங்கள் படைத்தவனுதலால் அந்தத் திருநாமங்களுக்கு ஸ்ரீபராசரபட்டர் அருளிச்செய்த "பகவத்குண தர்ப்பணம்" என்னும் மறுபெயருடைத்தான பாஷ்யத்தை ஸேவித்தால் எம்பெரு மானுடைய ஸ்வரூப ரூபகுண விபவைச்வரியங்களெல்லாம் விசதமாக விளங்கும்.

## எம்பெருமானுடைய உபயலிங்க நிருபணுதிகள்

14. நம்மாழ்வார் திருவாய்மொழி தொடங்கும்போதே *உயர்வற வுயர்நல முடைய வன்* என்று தொடங்கினராதலால் எம்பெருமானை ஸமஸ்தகல்யாண குணகண நிதியாக அறிவதே முக்கியமானது. *அகிலஹேய ப்ரத்யநீக கல்யாணைகதாநனென்று அறியவேணும். அகிலஹேய ப்ரத்யநீகத்வமும் கல்யாணைகதாநத்வமுமாகிற இவை யிரண்டும் உபயலிங்க மெனப்படும். ஒருவிதமான தோஷமும் தட்டாமலிருக்கைதான் அகில ஹேயப்ரத்ய நீகத்வ மாகும். கல்யாணகுணமென்று பேர்பெற்றவை யெல்லாவற்றிற்கும் கொள்கலமா யிருக்கை— கல்யாணை கதாநத்வமாகும். துக்கப்படுகை ஹேயகுணமானுலும் பரதுஃக்க துஃக்கித்வமென்பது ஹேயகுணமன்ருதலாலும், ஸ்ரீராமாயணத்தில் *பஹவோ ந்ருப! கல்யாணகுணு: புத்ரஸ்ய ஸந்தி தே* என்ற மகுடத்தின்கீழ் *வ்யஸநேஷு மநுஷ்யாணும் ப்ருசம்பவதி துஃக்கித:* என்று கூறின முகத்தால் கல்யாண குணமாகவே ஸ்பஷ்டமாகக் கூறியிருப்பதாலும் "பரதுக்க துக்கித்வத்தை ஸர்வேச்வரனுக்குக் கொண்டால் ஹேயப்ரத்யநீகத்வத்திற்கு மாறுகும்" என்கிற வாதத்திற்கு இடமில்லை.

15. எம்பெருமானுக்கு அநந்தனென்கிற திருநாமமு முண்டு. அந்தமாவது பரிச்சேதம். தேசபரிச்சேதம், காலபரிச்சேதம், வஸ்துபரிச்சேதம் என்கிற மூவகையான பரிச்சேதமு மில்லாதவன் எம்பெருமான் என்றபடி. 'இன்ன தேசத்திலுள்ளான், இன்ன தேசத்திலில்லை' என்று சொல்லமுடியாதபடி எல்லா தேசங்களிலு முளனுகையாலே தேசபரிச்

சேதமில்லாதவன். 'இன்னகாலத்திலுள்ளான், இன்னகாலத்திலில்லை' என்று சொல்லமுடியாதபடி எல்லாக் காலத்திலு மிருக்கையாலே காலபரிச்சேத மில்லாதவன். 'இன்ன வஸ்துவாக இருக்கிறான், இன்ன வஸ்துவாக இல்லை' என்று சொல்லமுடியாதபடி ஸகல வஸ்து ஸ்வரூபனாகவு மிருக்கையாலே வஸ்து பரிச்சேதமில்லாதவன்.

### அந்தர்யாமித்வத்தில் தோஷஸம்பந்தமில்லாமை

16. எம்பெருமான் ஸகல வஸ்துக்களிலும் அந்தர்யாமியா யிருப்பனென்றால் அந்தந்த வஸ்துக்களிலுள்ள தோஷங்கள் இவன்பால் ஒட்டாதோ? என்று சங்கைவரும். அந்த சங்கை வேண்டா. ஜீவாத்மாவானவன் சரீரத்தினுள் இருக்கச்செய்தேயும் சரீரத்திற்குண்டான இளமை முதுமை முதலியன எப்படி அந்த ஆத்மாவுக்கு வருவதில்லையோ அப்படியே ஸர்வவஸ்து சரீரகனான பகவானுக்கும் ஒரு வஸ்துவினுடையவும் ஒருவிதமான தோஷமும் தட்டாது. இதற்கொரு நிதர்சனம் காணலாம் குற்றம் செய்ததற்காக ராஜதண்டனை யடைந்த குற்றவாளி சிறைச்சாலையில் புகுவிக்கப்பட்டுத் துக்கங்களை யனுபவிக்கிறான். அதே சிறைச்சாலையில் அதற்கு நியாமகனான அதிகாரியும் உறைகின்றான். சிறையில் இருப்பு என்பது இவ்விருவர்க்கும் உள்ளதா யிருக்கச் செய்தேயும் அதிகாரியான பிரபுவுக்கு எவ்விதமான துக்கமும் கிடையாது. ஏன்? இவன் சிறைச்சாலையிலிருப்பது குற்றஞ் செய்தது காரணமாகவன்று; நியமிப்பதற்காக விருக்கிறான். ஆகவே 'இவனுக்கு துக்கமில்லாததோடு கூட மாதந்தோறும் ஆயிரம் இரண்டாயிரம் சம்பளம் பெறுகையாகிற ஆனந்தமுமுள்ளது. இதேபோல, கருமம் காரணமாக ஜீவன் சரீரவாஸம் பெறுகையாலே துக்கமுடையவனாக ஆகிறான். பரமபுருஷன் அங்ஙனன்றிக்கே *அந்த: ப்ரவிஷ்டச் சாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா* என்று வேதாந்த மோதினபடியே சாஸ்தாவாக அந்த: ப்ரவிஷ்டனா யிருப்பதனால் இவனுக்கு எவ்விதமான தோஷமும் ஒட்டாது.

### எம்பெருமானுடைய நீர்மைக் குணங்களின் சிந்தனை

17. ஈச்வரன் ஒப்புயர்வற்ற:எண்ணிறந்த திருக்குணங்களோடு கூடியிருக்கிறானெனினும் முக்கியமாக தயை பொறுமை வாத்ஸல்யம் முதலான சில திருக்குணங்களையே நாம் நிச்சலும் சிந்திக்கக் கடமைப்பட்டிருக்கிறோம். பிறர் நோவு கண்டால் ஐயோவென்று இரங்கியிருப்பன். அவர்களுக்கு எப்போதும் நன்மையையே சிந்தித்திருப்பன். நிலாத்தென்றல் சந்தனம் தண்ணீர்போலே பிறர்க்கே உரிமைப்பட்டிருப்பன். தன்னை யடிபணிந்தவர்களிடத்தில் பிறவி அறிவு ஒழுக்கம் முதலானவற்றா லுண்டான தண்மையைச் சிறிதும் பாராமல் தன்னைப் பணிந்தவர்களென்பதொன்றே கொண்டு நேசித்திருப்பன். உற்றாருறவினர் கைவிட்ட காலத்திலும்தான் கைவிடாதே யிருந்து செயற்கரியன செய்தும் அவர்களின் அபேக்ஷிதங்களைத் தலைக்கட்டிக்கொடுப்பன், அவர்களது காரியம் தலைக்கட்டினால் தன் காரியம் தலைக்கட்டிற்றாக வெண்ணி க்ருதக்ருத்யனா யிருப்பன். அவர்களுக்குத் தான்செய்த நன்மைகளில் ஒன்றையும் நினையாதே அவர்கள்செய்த ஸ்வல்ப ஸுக்ருதங்களையே மலையாகக்கொண்டு அவர்களை யனுக்ரஹிப்பதிலேயே நோக்காயிருப்பன். மனைவியர் மக்கள் செய்யும் குற்றங்களைக் காணக் கண்ணிட்டிருக்கும் புருஷனைப்போல அவர்கள் குற்றங்களை நினையாதே, குற்றங்களைப் பெரிய பிராட்டியார் காட்டினாலும் 'என்னடியார் அது செய்யார்' என்று சொல்வியும், *செய்தாரேல் நன்று செய்தார்* என்று சொல்வியும் வாத்ஸல்யம் காட்டியிருப்பன். மனமொழி மெய்களால் அவர்கள் குடிலர்களா யிருந்தாலும் தான் செவ்வியனா யிருந்து பரிமாறுவன். இப்படிப்பட்ட அரிய பெரிய திருக்குணங்களை அநுபவ ரஸிகர்களான பெரியார் தங்களுடைய அநுபவத்திற்குப் போக்கு வீடாக எடுத்துரைத்தால் அதில் வெறுப்பும் அதிர்ச்சியு மின்றிக்கே யிருப்பதுதான் நம்போலியர்க்கு குணாநுபவம்,

## எம்பெருமானுடைய ஸகல காரணத்வ நிருபணம்

18. எம்பெருமானுடைய நீர்மைக்குணங்களைக் கீழே பரக்கப் பேசினபடி, மேன்மைக் குணத்தைப் பேசப்புக்கால் 'ஸகலஜகத்துக்களுக்கும் அவனே காரண பூதன்' என்றறிவதொன்றே போதுமானது. நான்கு அத்யாயங்கள் கொண்ட சாரீரக மீமாம்ஸை யென்னும் ப்ரஹ்மஸூத்ரத்தில் இரண்டத்யாயங்களால் அவனுடைய ஸகல ஜகத்காரணத்வமே பலவகைப் பூர்வபக்ஷங்களையும் நிரஸித்து ஸ்தாபிக்கப்படுகிறது. ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்கள் மூன்றும் எம்பெருமானுடைய ஸங்கல்ப மாத்திரத்திஞல் நிகழ்பவை. காரணத்வமானது உபாதாநத்வம் நிமித்தத்வம் ஸஹகாரித்வம் என்று மூவகையாயிருக்கும். ஒரு பானையுண்டாக வேணுமாஞல் மண் உபாதான காரணமாயிருக்கும். குயவன் நிமித்த காரணமாயிருப்பன். தடி சக்கரம் தண்ணீர் முதலானவை ஸஹகாரி காரணமா யிருக்கும். உலகில் எந்த வஸ்து ஜனிக்கவேணுமாஞலும் இங்ஙனே மூன்று காரணங்கள் இன்றியமையாதனவாம். ஸகல ஜகத்துக்களுக்கும் உத்பாதகனை ஸர்வேச்வரன் தானெருவனே மூவகைக் காரணமாயுமிருப்பன் என்பதை நெஞ்சில் திடமாகக்கொள்ளவேணும்.

## பரவ்யூஹ விபவாந்தர்யாம்யர்ச்சாநிருபணம்

19. ஈச்வர ஸ்வரூபமானது—பரத்வம் வ்யூஹம் விபவம் அந்தர்யாமித்வம் அர்ச்சாவதாரம் என்று ஐந்து ப்ரகாரத்தோடே கூடியிருக்கும். இவ்வைந்தையும் சுருக்கமாக உபபாதிக்கக் கேளீர், [பரத்வம்.] *நலமந்த மில்லதோர் நாடு* என்கிற பரமபதத்திலே நித்யஸூரிகளான அனந்தகருட விஷ்வக்ஸேநாதிகளுக்கும், ஸம்ஸார ஸம்பந்தமற்றுச் சென்று சேர்ந்த முக்தாத்மாக்களுக்கும் போக்யனுய்க்கொண்டு எழுந்தருளி யிருக்குமிருப்பு பரத்வமெனப்படும். [2. வ்யூஹம்.] இதற்கு உபயோகம் லீலாவிபூதியி லாகையாலே இவ் விபூதியினுடைய ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை நிர்வஹிக்கைக்காகவும், புபுக்ஷுக்களான ஸம்ஸாரிகளை இஷ்டப்ராபண அநிஷ்ட நிவாரணங்களாலே ஸம்ரக்ஷிக்கைக்காகவும் உபாஸகர்களை யநுக்ரஹிக்கைக்காகவும் ஸங்கர்ஷணப்ரத்யும்ந அநிருத்த ரூபேண நிற்கும் நிலை வியூஹமெனப்படும். [3- விபவம்.] *அஜாயமானோ' பஹுதா' விஜாயதே* என்றும் *பிதா புத்ரேண பித்ருமாந் யோநியோநௌ* என்றும் உபநிஷத்து ஓதுகிறபடியும், *எங்ஙின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்* *மீனுயாமையுமாய் நரசிங்கமுமாய்க் குறளாய், கானரேனமுமாய்க் கற்கியாமின்னங் கார்வண்ணனே* என்று ஆழ்வாரருளிச் செய்கிறபடியும் மநுஷ்யதிர்யக் ஸ்தாவராதி ஜன்மங்கள் கொள்ளுகை விபவமெனப்படும். [4. அந்தர்யாமித்வம்.] *ய ஆத்மாநம் அந்தரோ யமயதி* சாஸ்தா விஷ்ணுரசேஷஸ்ய ஜகதோ யோஹ்ருதி ஸ்தித:* இவற்றுளெங்கும் மறைந்துறைவாய்* இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே சேதநருடையவுள்ளே ப்ரவேசித்து ஸகல ப்ரவ்ருத்திகளுக்கும் நியாமகனு யிருக்குமிருப்பு அந்தர்யாமித்வமெனப்படும். [5. அர்ச்சாவதாரம்.] *தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவந்தானே* என்கிறபடியே நமக்கு அபிமதமான த்ரவ்யத்தைத் திருமேனியாகக் கொண்டு நம்போல்வாருடைய ஆராதனைக்கு எளியனுய் ஸர்வஸஹிஷ்ணுவாய் ஸ்நாநபோஜநாதி ஸகல வ்யாபாரங்களும் அர்ச்சக பராதீனமா யிருக்கப்பெற்ற நிலைமை அர்ச்சாவதார மெனப்படும்.

20. பிள்ளை லோகாசார்ய ரருளிச்செய்த தத்வ த்ரயத்தில் முடிவான சூர்ணை—"ஸ்வஸ்வாமிபாவத்தை மாருடிக்கொண்டு அஜ்ஞரைப்போலேயும் அசக்தரைப்போலேயும் அஸ்வதந்த்ரரைப்போலேயு மிருக்கச்செய்தேயும் அபார காருண்ய பரவசனுய்க்கொண்டு ஸர்வாபேக்ஷிதங்களையும் கொடுத்தருளும்"—என்பது. இஃதொன்றை நிச்சலும் சிந்தனை செய்து கொண்டு வாழ்வாரே வாழ்வார். ... ... ...

தத்வத்ரயப் பதினெட்டு முற்றிற்று.

ஸ்ரீ:

# அஷ்டாதசாஷ்டாதசமஹார்த்த நிதியில் ஸ்ரீவசநபூஷணத்தில் பதினெட்டு

## ஸ்ரீவசனபூஷனப் பெருமை.

1 ஸ்ரீவசன பூஷணத்திலும் ஆசார்ய ஹ்ருதயத்திலும் பதினெட்டு விஷயங்களையெடுத்து அநுபவிப்பதனால் பர்யாப்தி பிறவாது. முமுக்ஷுப்படியிற்போல ஒவ்வொரு ப்ரகரணத்திலிருந்தும் பதினெட்டெடுத்து அநுபவித்தாலாவது சிறிது த்ருப்தியாகும். ஆனாலும் ப்ரதிஜ்ஞையின்படி பதினெட்டே கொண்டு அநுபவிக்கலாகிறது. மணவாள மாமுனிகள் உபதேசரத்தினமாலையில் சில ஆழ்வார்களுக்கு ஒரு பாசுரம் சில ஆழ்வார்களுக்கு இரண்டு பாசுரம், மூன்று பாசுரம், பெரியாழ்வார்க்கு ஐந்து பாசுரம் இப்படியாக இட்டருளினவர், *அன்னபுகழ் முடும்பையண்ண லுலகாசிரியர் இன்னருளால் செய்த கலை யாவையிலும்— உன்னில் திகழ்வசன பூடணத்தின் சீர்மையொன்றுக் கில்லை* என்று தொடங்கி ஏழு பாசுரங்களிட்டருளினார் ஸ்ரீவசனபூஷணத்திற்கு. *ஆர்வசன பூடணத்தி னாழ்பொருளெல்லா மறிவார்?* என்றருளிச் செய்ததோ மர்மஸ்பர்சியானது. இதற்குள்ள பல தனியன்களில் *ஸாங்காகில த்ரவிட ஸம்ஸ்க்ருத ரூபவேத ஸாரார்த்த ஸங்க்ரஹ மஹாரஸ வாக்யஜாதம், ஸர்வஜ்ஞலோக குருநிர்மித மார்யபோக்யம் லந்தே ஸதா வசநபூஷண திவ்ய சாஸ்த்ரம்* என்கிற வொரு தனியன் போதும் இதன் அப்ரமேயமான பெருமையை யுணர்த்துவதற்கு. "ஸர்வஜ்ஞலோக குருநிர்மிதம்" என்று இதற்கிட்ட விசேஷணமானது யதார்த்தமானது. பிள்ளை லோகாசார்யருடைய ஸர்வஜ்ஞத்வம் ஒருபுறமிருக்க, அவருடைய பரமப்ராமாணிகத்வம் அநந்ய ஸாமாந்யமன்றோ. எந்த அர்த்தத்திலும் ஆக்ரஹ மின்றிக்கே ப்ரமாண ஸம்ப்ரதிபந்நமானவளவே அருளிச் செய்யும் வைகரி வேறு எந்த ஆசார்யருடைய நூலிலும் காணமுடியாத தொன்றன்றோ. இவ்வதிசயங்க ளெல்லாவற்றுக்கும் மேற்பட மணவாள மாமுனிகளால் வியாக்கியானிக்கப்பெற்ற தென்னு மதிசயம் ஸர்வோத் க்ருஷ்டமானதன்றோ. இந்த மஹாக்ரந்தத்தை நான்கு ப்ரகரணமாகக் கொண்டிருப்பது அத்யயந அத்யாபனங்களுக்கானதொரு ப்ரக்ரியையே யொழிய ஒன்பது பிரகரணமான விச்சேதமும் ஆறு ப்ரகரணமான விச்சேதமுமே வியாக்கியானத்தாலும் தனியன்களாலும் ஸித்தமானது. ஸ்ரீவசநபூஷணமென்று க்ரந்தத்திற்குத் திருநாமம் செவிக்கினிதாக அமைந்துள்ளது. ரத்னங்களை நிறைத்துச் சமைத்ததொரு பூஷணத்திற்கு ரத்நபூஷணமென்று பெயராகிறாப்போலே பூருவாசாரியர்களின் சிறந்த வசனங்களை நிறைத்துச் செய்தருளப்பட்டதாய் அநுஸந்திக்கு மவர்களுக்கு மிக்க அழகு பெறுவிக்கு மதா யிருக்கையாலே இதற்கு ஸ்ரீவசந பூஷணமென்று திருநாமமாயிற்று. இது உபதேச ரத்தினமாலையில்* முன்னங்குரவோர் மொழிந்த வசனங்கள் தன்னை ... ... ... * என்னும் பாசுரத்தினால் விளங்கும்.

## புருஷகார வைபவ விசதீகரணம்

2. *லக்ஷ்மீ: புருஷகாரத்வே நிர்திஷ்டா பரமர்ஷிபி:, மமாபி ச மதம் ஹ்யேதத் நாந்யதா லக்ஷணம் பவேத்* என்கிற பகவச் சாஸ்த்ரவசனத்தின்படி பிராட்டிக்குப் புருஷகாரத்வம் நியதமாயிருக்கும். ஸ்வத: பரமகாருணிகனாய், ஸம்ஸாரிகளை யநுக்ரஹிப்பதற்கு வழிதேடிக் கொண்டிருக்குமவனான எம்பெருமானுக்குப் புருஷகார க்ருத்யம் செய்ய ஒருவர் வேணுமோ? என்கிற சங்கைக்கு (ஸ்ரீகுணரத்நகோசத்தில்) பட்டர் ஸ்ரீஸூக்தியை யநுஸரித்து முமுக்ஷுப்படியிலே பரிஹார மருளிச் செய்யப்பட்டது. *பிதேவ த்வத்ப்ரேயாந்...

பவதிச கதாசித் கலுஷதி:* என்பது பட்டர் ஸ்ரீஸூக்தி,*நீரிலே நெருப்புக் கிளருமாபோலே குளிர்ந்த திருவுள்ளத்திலே அபராதத்தாலே சீற்றம் பிறந்தால் பொறுப்பது இவளுக்காக* என்பது (முமுக்ஷுப்படியிலே) இவர் தம்முடைய ஸ்ரீஸூக்தி. ப்ரக்ருத ஸ்ரீ வசநபூஷணத்தில் (10, 11, 12, 13 ஆகிய)நான்குசூர்ணைகள் இன்சுவைமிக்கவை. (ஸாரமானகருத்துகேண்மின்.) ஸம்ச்லேஷதசையில் ஈச்வரனைத் திருத்துவளென்றும், அப்படி திருத்துவது உபதேசத்தாலே யென்றும், உபதேசத்தாலே ஈச்வரன் திருந்தாவிடில் அழகாலே திருத்துவளென்றும் சொல்லப்படுகிறது. இதைச் சிறிது விவரிப்போம்; தயாளுவென்றும் க்ஷமாநிதியென்றும் பேர்பெற்ற பெருமான் குற்றவாளர்களான அஸ்மதாதிகளையும் காத்தருளக் குதூஹல முடையவனே; அதனால் நமது குற்றங்களைக் கணிசியாமலே க்ஷமித்தோ போக்யமாகக்கொண்டோ அநுக்ரஹிப்பன். அவன்முன் ஹிதபரனுமாகையாலே குற்றங்களைக் கணக்கிட்டு நிக்ரஹிக்கவும் தண்டிக்கவும் புகுவன். அப்படிப்பட்ட ஸமயங்களில் * ஸஹதர்மசரீம் சௌரே: ஸம்மந்த்ரித ஜகத்திதாம், அநுக்ரஹமயீம் வந்தே நித்ய மஜ்ஞாத நிக்ரஹாம்* என்று ஒருநாளும் நிக்ரஹ மறியாதவளென்றும் அநுக்ரஹமே வடிவெடுத்தவளென்றும் போற்றப்பட்ட பிராட்டியானவள் நாதனுக்குச் சில உபதேசங்கள் பண்ணுவள், மன்றாடுவள், ஏதேதோ செய்வள்.

(இங்கு திவ்ய தம்பதிகளின் ஸம்வாதம் கேளீர்.)

3. பிராட்டி:—நாதா! மணற் சோற்றிலே கல்லாராய்வதுண்டோ? குற்றமே வடிவெடுத்த இவர்கள் பக்கலிலே நற்றம் தேடுவதும் அஃதில்லையென்று கைவிடப் பார்ப்பதும் தகுதியோ? சிறிது ஆலோசித்து விடைத்தரவேணும்.

நாதன்:—திருவே! நான் விதி நிஷேதங்கள் நிரம்பிய சாஸ்த்ரங்களை வெளியிட்டிருக்கிறேனென்பது உனக்குத் தெரியுமே. விதித்தவற்றைச் செய்தும் விலக்கியவற்றை விட்டும் நெறியிலே வர்த்திப்பவர்களை அநுக்ரஹிப்பதும், நெறி மீறினவர்களை நிக்ரஹிப்பதும் சொல்வேனென்பதும் சாஸ்த்ரங்களிலெல்லாம் முறையிட்ட விஷயந்தானே. குற்றவாளர்களையெல்லாம் பரிக்ரஹிப்பதானால் சாஸ்த்ர மேதுக்கு? இதை நீ ஆலோசிக்கவேணும்.

பிராட்டி:—நீர் சொன்னபடி சாஸ்த்ரமிருப்பது வாஸ்தவம். உம்மை தயாளுவென்றும் க்ஷமாசீலரென்றும் வத்ஸலரென்றும் சொல்லிப் போருகிற சாஸ்த்ரங்களுமுண்டே. அவற்றுக்கு ஜலாஞ்ஜலிதானோ? இதை நீ நன்கு ஆலோசித்து விடைத்தரவேணும்.

நாதன்: என்னுடைய க்ஷமை முதலான குணங்களும் ஜீவிக்கவேணும்; சாஸ்த்ரமும் ஜீவிக்கவேணும்; அதற்குரிய வழியை நீயே சொல்லு பார்ப்போம். எனக்குப் பிடிவாதமொன்றுமில்லை; யுக்தமான வழிகாட்டினால் அதைத் தழுவுகிறேன்.

பிராட்டி: நாதா! குற்றவாளர்களெல்லாரையுமா க்ஷமிக்கச் சொல்லுகிறேன் நான்? மேன்மேலும் குற்றஞ் செய்துகொண்டு மூலையடியே திரியுமவர்கள் பலருண்டே; அன்னவர் நள் திறத்தில் சாஸ்த்ரப்படி தண்டதரனாயிருப்பதை நான் தடுக்ககில்லேன். அநுதாப லேசமுமின்றிக்கே விமுகர்களாகவே யிருப்பார்திறத்தில் (க்ஷிபாமி) (நக்ஷமாமி) என்னும் சாஸ்த்ரங்களை தாராளமாகப் புகவிடும். அநுதாபங்கொண்டு திருவடிவாரம் வந்து சேர்ந்தவர்களைப் பழைய குற்றங் காரணமாகச் சீறுவது கூடாது என்றன்றோ நான் சொல்லுவது.

3. இங்ஙனே பிராட்டி கூறுவது கேட்டு எம்பெருமான் திருந்திவிடுவதுண்டு. சில சமயங்களில் 'ஆமாம் போ, உனக்கு வேறு பணியேது?' என்று உதறிவிடவுங்கூடும். அப்போது பிராட்டி கண்ணைப் புரட்டிக் கச்சை நெகிழ்த்தித் தன்னழகாலே நாதனைப் பிச்சேறும்படி பண்ணி, தான் சொன்னபடி செய்தன்றி நிற்கமாட்டாமே செய்திடுவள். இதனை நம்மாழ்வார் * அல்லிமலர்மகள் போகமயக்குக்களாகியும் நிற்குமம்மான்* என்கிற பாசுரத்தாலே காட்டினர்.

பட்டர் (ஸ்ரீகுணரத்நகோசத்தில்)*உசிதைருபாயைர் விஸ்மார்ய* என்ற விடத்து உசிதோ பாயங்களாக விவக்ஷிதங்கள் இவையேயாம்.

சரணாகதி வைபவ நிருபணம்

5. புருஷகார பூதையான பிராட்டியின் வைபவம் கீழே நிரூபிக்கப்பட்டது. அப் பிராட்டி புருஷகாரம் செய்வது யார்க்கு? என்பதை யறியவேணும். குற்றங்களை மேன் மேலும் செய்துகொண்டே யிருந்து அநுதாப லேசமுமின்றிக்கே யிருப்பாரைத் திருவுள்ளத் தாலும் இட்டு எண்ணமாட்டாள். செய்த குற்றங்களுக்கு அநுதாபங் கொண்டு அபிமுகர் களா மவர்களுக்கே புருஷகாரம் செய்வள். அந்த ஆபிமுக்க்யத்திற்குப் பல பெயர்களுண்டு. சரணாகதி யென்பதும் ஒரு பெயர். சரணாகதியாவது என்ன? அதற்கு என்னென்ன நியமங்க ளுள்ளன? என்பதை முக்கியமாகத் தெரிந்துகொள்ள வேண்டும். ஸ்ரீவசன பூஷணத்தில் செய் தருளும் நிரூபணங்களை நோக்குமளவில் (அ,நாவது) "ரக்ஷணத்துக்கு அபேக்ஷிதம் ரக்ஷ்யத் வாநுமதியே." "உன் . மனத்தாலென் னினைந் திருந்தா யென்கிறபடியே ப்ராப்திக்கு உபாயம் அவன்னினைவு. அதுதான் எப்போது முண்டு; அது பலிப்பது இவன்னினைவுமாறினால்" இத் யாதி சூர்ணிகளை யநுஸந்திக்குமிடத்து "பகவத்ப்ரவ்ருத்தி விரோதி ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தி : ப்ரபத்தி:" என்பதுதான் தேறும். இது பிள்ளை லோகாசார்யருடைய ஸ்ரீ ஸூக்தியால் மட்டு மன்று தேறுவது. ஸகல சாஸ்த்ர ஸித்தாந்தமுமிதுவே. நம்முடைய ப்ரவ்ருத்தி நமக்கு ரக்ஷக மாக மாட்டாததோடு எம்பெருமான் செய்தருள நினைக்கும் ரக்ஷணத்திற்கு இடையூறாகவும் முடிந்து நிற்கும். இதை கஜேந்திராழ்வான் விஷயத்திலும் த்ரௌபதீ விஷயத்திலும் ஸ்பஷ்டமாகக் காணாநின்றோம். இவ்விருவரும் ப்ராணரக்ஷத்திலும் மானரக்ஷத்திலும் ஸ்வ ப்ரவ்ருத்தி பண்ணிக்கொண்டிருந்தவரையில் எம்பெருமானருளைப் பெற்றிலரென்பதையும், ஸ்வப்ரவ்ருத்தி ஒய்ந்தவுடனே அதனைப் பெற்றார்களென்பதையும் அறியாதாரில்லை. முமுக்ஷுப் படி சரமச்லோகப்ரகரணத்தில் *சசால சாபஞ்ச முமோச வீர:* என்கிற ஸ்ரீராமாயண ச்லோ கத்தை யெடுத்துக்காட்டி உண்டாக்கியிருக்கின்ற தெளிவையும் உணர்ந்திருக்கின்றீர்கள். ஆகவே ப்ரபத்திஸ்வரூபத்தை உள்ளபடியுணராமலும், இதுவொரு அத்யவஸாய விசேஷமே யென்று தெரிந்துகொள்ளாமலும் 'இது உபாயம்' என்கிற வாதத்தையுங் கிளப்பிப் போராடு மவர்கள் ப்ரபத்தி ஸ்வரூபத்தையே உணராதவர்கள் என்று உபேக்ஷிக்கத்தக்கவர்களத்தனை.

6. பகவச் சாஸ்த்ரத்தில் *ஸர்வஜ்ஞோபி ஹி விச்வேசஸ் ஸதா காருணிகோபிஸந். ஸம் ஸாரதந்த்ரவாஹித்வாத் ரக்ஷ்யாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே.*என்று ரக்ஷணத்திற்காக எம்பெருமான் ப்ரதீக்ஷிப்பது ரக்ஷ்யனுடைய அபேக்ஷை என்று சொல்லியிருக்கச் செய்தேயும் "ரக்ஷணத் துக்கு அபேக்ஷிதம் ரக்ஷ்யத்வாநுமதியே" என்று அபேக்ஷா சப்தத்தின் அர்த்தம் அநுமதி மாத்ரமாக அருளிச்செய்திருப்பது ஸகல சாஸ்ரங்களோடும் பொருந்துகைக்காகவேயாம். *இசைவித்தென்னையுன் தாளிணைக் கீழ் இருத்துமம்மானே?* என்ற நம்மாழ்வார் பாசுரத்தில் 'இசைவித்து' என்றதே உயிரான வார்த்தை.

"ப்ராப்தாவும் ப்ராபகனும் ப்ராப்திக்கு உகப்பானும் அவனே."

7. ஸ்ரீவசனபூஷணத்தில் (70) ப்ராப்தாவும் அவனே, ப்ராபகனும் அவனே, ப்ராப் திக்கு உகப்பானும் அவனே-என்று சேதநன் தலையில் ஒன்றுமில்லாதபடி துடைத்து எல்லா வற்றையும் எம்பெருமான் தலையிலே ஏற்றியிருப்பதுதகுமா? என்று சிலர் கலங்கியிருப்பார்கள். அவன் ப்ராபகனாகவும் ப்ராப்திக்கு உகப்பானாகவும் இருப்பதை ஒருவாறு ஒப்புக்கொள்வோம். ப்ராப்தாவும் அவனே யென்றால் இது எப்படி பொருந்தும்? அர்த்தபஞ்சகத்தில் *ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோ ரூபம் ப்ராப்துச் ச ப்ரத்யகாத்மந:* என்று சேதநனையன்றோ ப்ராப்தாவாக

ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கிறது; *சரணௌ சரணம் ப்ரபத்யே*என்றும் *உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே* என்றும் சேதநனன்றோ சொல்லுகிறான். உபநிஷத்தும் *ப்ரஹ்மவிதாப்நோதி பரம*என்று இவனையேயன்றோ ப்ராப்தாவாகச் சொல்லியுள்ளது. எம்பெருமானை ப்ராப்தாவாகச் சொல்லுவது எப்படி பொருந்தும்? என்று பலர் கலங்கியிருப்பர்கள். எம்பெருமானார் ஸ்ரீஸூக்தியினால்தான் நாம் தெளிவுபெற வேணும். ஸ்வாமி ஸ்ரீபாஷ்யத்தைத் தலைக்கட்டியருளும்போது அநாவ்ருத்தி விஷயத்தில் தோன்றின சங்கையைப் பரிஹரிக்குமிடத்து "அத்யர்த்த ப்ரியம் ஜ்ஞாநிநம் லப்த்வா" என்று அருளிச் செய்திருப்பதில் லப்த்வா என்பதனால் ஈச்வரனைத்தானே ப்ராப்தாவாகப் பேசியுள்ளார். உபநிஷத்தானது "ரஸோ வை ஸ:, ரஸம் ஹ்யேவாயம லப்த்வா ஆநந்தீ 'பவதி' என்றோதியிருப்பதில் 'லப்த்வா' என்பதற்கு சேதநனைக் கர்த்தாவாகச் சொல்லியிருப்பது எம்பெருமானார்க்குத் தெரியாததன்று. தெரிந்திருந்தும் ஸ்ரீபாஷ்யத்தில் பரமபுருஷனை லாபகர்த்தாவாக வைத்து "பரமபுருஷ: ஜ்ஞாநிநம் லப்த்வா" என்றருளிச் செய்ததை உற்றுநோக்க வேணும். சாஸ்த்ரார்த்தங்களில் இரண்டு நிலையுண்டு; தீர்த்தங்களில் இது வடிக்கட்டினது, 'இது வடிக்கட்டாதது' என்னுமா போலே, வடிக்கட்டின சாஸ்ரார்த்தமும் வடிக்கட்டாத சாஸ்த்ரார்த்தமுமுண்டென்று உணரவேணும். கீதையில் * ஸமஹாத்மா ஸுதுர்லப:* என்கிற பகவத் வசனத்தை ஊன்றி நோக்கினால், அப்பெருமான் சேதநனைப்பெறுவதற்குப் படாத பாடுகள் படுகிறானென்பது தெற்றென விளங்கும். உலகில் 'ப்ரஸாதம் துர்லபம், ரத்னம் துர்லபம், என்றிங்ஙனே எவன் சொல்லுவன்? அவற்றை லபிக்க விரும்புமவனன்றோ சொல்லுவன். ஆக, ப்ராப்தாவும் அவனே யென்றருளிச் செய்தது பரமசாஸ்த்ரார்த்தமென்று தேறிற்றாகும். எவன் ப்ராப்தாவோ அவன்தான் ப்ராப்திக்கு உகப்பானென்பதும் தேறிற்று.

"குணக்ருததாஸ்யத்திலுங் காட்டில் ஸ்வரூப ப்ரயுக்தமானதாஸ்யமிறேப்ரதாப் நம்"

8. நம்முடைய அடிமைக்கு இலக்கு மூன்று விஷயங்கள். பகவத் விஷயம், பாகவத விஷயம், ஆசார்ய விஷயம் என்று. இவ்விஷயங்களில் சிலபல குணங்களிருப்பது கண்டு நாம் அடிமைப்படுகிறோமா ? அடிமைப்பட வேண்டியது கடமையென்று அடிமைப்படுகிறோமா? என்று ஆராயுமளவில், குணங்கண்டால்தான் அடிமை செய்யத் தோன்றுமென்று நினைக்க நேருமாதலால் குணத்திற்காகத்தான் அடிமைப்படுகிறோமென்று கொள்ளலாகும். ஆனால் இக்கொள்கை தவறானதேயாகும். குணங்கண்டு அடிமைப்படுவதானால், அந்யதாஞ்ஞான விபரீத ஜ்ஞானங்களுக்குக் கொள்கலமான நாம், உண்மையில் குணமுள்ளவிடத்திலுங்கூட குணமில்லையென்று மருண்டு அடிமையை விட்டுவிட நேரும். குணமில்லாதவிடத்தில் நாம் அடிமைப்படலாமோ? நாம் மருளாதே உண்மையாகவே குண ஹீநமாயிருந்தால் அங்கு அடிமையை விட்டுத்தானே தீரவேண்டும் என்றிப்படி சிலர் வாதம் பண்ணுவார்கள். இஃது ஏலாத வாதம். அடிமைக்கு ப்ராப்தஸ்தலமென்றும் அப்ராப்த ஸ்தலமென்றும் இரண்டுண்டு. அப்ராப்த ஸ்தலத்திலடிமையைப் பற்றி இங்கு விசாரமில்லை. அப்ராப்தஸ்தலத்தில் காசு கிடைத்தால் அடிமை, இல்லையானால் இல்லை' என்பது தெரிந்ததே. ப்ராப்தமான ஸ்தலத்தில் ப்ராப்தி யென்பது தவிர வேறு எந்த உபாதியும் காணலாகாது. *கண்டரிகாழ்வனவே காதலன் தான் செய்திடினும், கொண்டானையல்லால் அறியாக் குலமகள் போல் * என்கிற குலசேகராழ்வார் பாசுரத்தையும், * ஆகிலுங் கொடியவென்னெஞ்சம் அவனென்றே கிடக்கு மெல்லே* என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தையும், ஸ்ரீராமாயணத்து அயோத்யா காண்டத்தில் அத்ரி பகவானுடைய ஆச்ரமத்திலே அவருடைய தேவியாரான அநஸூயா தேவிக்கும் ஸீதாபிராட்டிக்கும் நடந்த ஸம்பாஷணையையும் கண்டு கொள்வது. * குணேர்

தாஸ்யமுபாகத* என்று இளையபெருமான் சொன்னதையும், மதுரகவிகள் திறத்திலே *அபிச குணவசாத் ததேகசேஷீ * என்றதையும் கொண்டு சங்கை பண்ணவேண்டா. ப்ராப்தமான ஸ்தலத்திலே குணமுங் கண்டால் பொன்தாமரைக்குப் பரிமளமுண்டானாற்போல் கொள்ளத் தக்கது. 'குணவசாத்' என்றதற்கு முன்னே 'அபிச' என்றது நோக்கத்தக்கது. ... *

## ஸ்ரீவசனபூஷணத்தின் ஸாரமான பாகவதப்ரபாவம்

9. *ந சூத்ரா பகவத்பக்தா விப்ரா பாகவதா: ஸ்ம்ருதா, ஸர்வவர்ணேஷு தே சூத்ரா யே ஹ்யபக்தா ஜனார்தநே. *ச்வபசோபி மஹீபால விஷ்ணுபக்தோ த்விஜாதிக:, விஷ்ணுபக்திவிஹீநஸ் து யதிச் ச ச்வபசாதம:* என்பது முதலான பல ப்ரமாணங்கள் வர்ணாச்ரமங்களில் சரக்கறுத்து பகவத் ஸம்பந்தத்தையே உத்கர்ஷ ஹேதுவாகச் சொல்லி யுள்ளன. *பக்திரஷ்டவிதா ஹ்யேஷா யஸ்மிந் ம்லேச்சேபி வர்த்ததே, தஸ்மை தேயம் ததோ க்ராஹ்யம் ஸ ச பூஜ்யோ யதா ஹ்யஹம்.* என்கிற பகவத் வசனத்தைத் தொண்டரடிப் பொடியாழ்வார் *இழிகுலத்தவர்களேலும் எம்மடியார்களாகில் தொழுமினீர் கொடுமின் கொண்மினென்று நின்னோடு மொக்க வழிபட வருளினாய்* என்கிற பாசுரத்தாலே நிரூபித் தருளினார் இங்ஙனேயுள்ள பல்லாயிரம் பிரமாணங்களினால் உத்க்ருஷ்ட ஜன்மம் இன்ன தென்றும் நிக்ருஷ்ட ஜன்மம் இன்னதென்றும் நிஷ்கர்ஷிக்கப்பட்டிருக்குமதை நம் ஆசாரியர்கள் பரக்க அருளிச் செய்துள்ளார்கள். ஆழ்வார்களில் சிலர் தாழ்ந்த வருணங்களில் அவதரித்திருப்பதனால் அவர்கள் பக்கலில் ஜாதிப்ரயுக்தமான நிகர்ஷம் பாராட்டலாகாது என்ப தற்காகவே இவ்விஷயம் ரஹஸ்ய நூல்களில் நிரூபிக்கப்பட்டுள்ளது. போலியான பக்தியை அபிநயித்து பாகவதனென்றும் பக்தனென்றும் பேர் சுமக்கின்றவர்களைப் பற்றி இந்த உத்க்ருஷ்ட ஜன்ம ப்ரபாவ விஷயம் ஸர்வாத்மநா அப்ரஸக்தம். *கிமப்யத்ராபி ஜாயந்தே யோகிநஸ் ஸர்வயோநிஷு, ப்ரத்யக்ஷிதாத்ம நாதாநாம் நைஷாம்சிந்த்யம் குலாதிகம்.* என்கிற பிரமாணத்திற்கு இலக்கான மஹநீயர்களைப் பற்றியே உத்க்ருஷ்ட ஜந்ம நிரூபணம் ரஹஸ்ய க்ரந்தங்களில் அமைந்தது. ஆனால் வேஷதாரிகளான இக்காலத்தவர்கள் அந்த நிரூபணங் களைத் தங்கள் விஷயமாக ப்ரமித்து அஹங்கரித்து அழிகைக்கு உடலாகையாலே, பூருவர் களின் க்ரந்தங்களில் இந்த நிரூபணங்கள் இல்லாதிருக்கலாமேயென்று சில மஹான்கள் நினைக் கவும் நேர்கின்றது. அஸங்குசித ஹ்ருதயர்களான ஆசாரியர்களோவென்னில் சாஸ்த்ரார்த் தங்களை உள்ளது உள்ளபடி நிரூபித்தருளக்கடமைப்பட்டவர்களாதலால் ஹிதசிந்தையோடே இந்த நிரூபணங்களைப் பண்ணிப் போந்தார்கள். உண்மையான பாகவத ப்ரபாவம் சாஸ்த்ரங்களிலும் ஆசார்ய ஸ்ரீஸூக்திகளிலுமுள்ளபடி கேண்மின்.

10. உலகத்தில் அவரவர்கள் நமக்குப் பெருமை யுண்டென்று நினைப்பதற்குப் பல ஹேதுக்களுள்ளன. உயர்ந்த ஜாதியிலே பிறந்திருக்கின்றோமென்று சிலர் பெருமை கருதுவர். உயர்ந்த ஆச்ரமத்தில் இருக்கின்றோமென்று [ஸந்ந்யாஸாச்ரமம் பூண்டு யதியாயிருக்கின்றோ மென்று] சிலர் பெருமை பாராட்டுவர். தர்க்க வியாகரண மீமாம்ஸைகள் முதலான சாஸ்த் ரங்களில் விசேஷபாண்டித்யம் படைத்திருக்கிறோமென்று சிலர் பெருமை கொள்வர். வேத விதிகளைத் தவறாது ஸ்நாந ஸந்த்யாவந்தனம் முதலான நித்யநைமித்திக ஆசாரங்களில் வழுவா திருக்கின்றோமென்று சிலர் தம்மைப் பெரியோராக நினைத்திருப்பர்கள். இப்படி அவரவர்கள் தாங்கள் நினைத்திருப்பதே யன்றி இக்காரணங்கள் பற்றி அவர்களைப் பெருமைவாய்ந்தவராக இதரர்கள் பலரும் நினைத்திருப்பது முண்டு; சொல்லுவதுமுண்டு. எம்பெருமானுக்கு அடிமைப்பட்டிருத்தலே ஆத்மாவுக்கு நிரூபகமென்று நிஷ்கர்ஷித்து அறிதற்குத் தகுதியாக த்யாஜ்யோபாதேயங்களைப் பகுத்துணரத்தக்க ஞானமில்லாதவர்களே இங்ஙனம் நினைத்திருப்

பர்களென்றும், அப்படிப்பட்ட ஞானமுள்ளவர்கள் கீழ்ச் சொன்ன காரணங்களினால் மாத்திரம் ஒரு பெருமை கருதார்கள், பகவத் ஸம்பந்தமொன்றைக் கொண்டே பெருமையை நிஷ்கர்ஷிப்பர்களென்றும் நம் ஆசாரியர்கள் அறுதியிட்டுள்ளார்கள்விசிஷ்ய ஸ்ரீவசநபூஷனே.

11. இவ்விஷயங்களுக்கு அடைவே பிரமாணங்கள் காட்டப்படுகின்றன; "சதுர்வேததரோ விப்ரோ வாஸுதேவம் ந விந்ததி,வேதபார பராக்ராந்தஸ் ஸ வை ப்ராஹ்மணகர்த்தப:" நான்கு வேதங்களையும் நன்கு அதிகரித்துவைத்தே வேதமுழுப் பொருளாகிய எம்பெருமானை அறியப்பெருதவன் குங்குமஞ் சுமந்த கழுதைபோலே தான் சுமந்து கொண்டு திரிகிற வேதத்தின் பரிமளமறியாத பிராமணக் கழுதையென்று சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகவே வெறும் பிராமண ஜாதிப்பிறப்பைக் கொண்டே பெருமை பாராட்டலாகாதென்பது விளங்கிற்று. *ச்வபசோபி மஹீபால விஷ்ணுபக்தோ த்விஜாதிக:, விஷ்ணு பக்தி விஹீநஸ் து யதிச் ச ச்வபசாதம:*சண்டாள யோனியிற் பிறந்தானாயினும் விஷ்ணு பக்தியுடையவனாயிருந்தால் அவன் கேவலப்ராஹ்மணனிற் காட்டிலும் சிறந்தவன்; உத்தமாச்ரமியானாலும் எம்பெருமானிடத்தில் பக்தியில்லாதவன் சண்டாளனிற் காட்டிலும் தண்ணியன் என்று இதனால் சொல்லிற்று. ஆகவே வெறும் ஸங்ந்யாஸாச்ரமத்தைக் கொண்டே பெருமை கருதலாகாதென்று விளங்கிற்று * தத் கர்ம யந்ந பந்தாய ஸா வித்யா யா விமுக்தயே, ஆயாஸாய அபரம் கர்ம வித்யாந்யா சில்பநைபுணம்.*மோக்ஷார்த்தமாக உபயோகப்படும் வித்யை எதுவோ அதுவே வித்யையாகும்; அப்படியல்லாதது செருப்புக்குத்தக் கற்ற கல்வி போன்றதேயாகும் என்று இதனால் சொல்லிற்று. ஆகவே வெறும் தர்க்க பாண்டித்யத்தைக் கொண்டே பெருமை பாவிக்கலாகாதென்பது விளங்கிற்று.

* ஆம்நாயாப்யஸநாநி அரண்யருதிதம், வேதவ்ரதாநி அந்வஹம்
ரேமதச் சேதபலாநி பூர்த்தவிதயஸ் ஸர்வே ஹுதம் பஸ்மநி,
தீர்த்தாநாமவகாஹநாநி ச கஜஸ்நாநம், விநா யத்பதத்வந்த்
வாம்போருஹஸம்ஸ்ம்ருதீ: விஜயதே தேவஸ் ஸ நாராயண:*

எம்பெருமானுடைய சிந்தனை யில்லாதவர்கள் செய்கின்ற கர்மாநுஷ்டானம் சாம்பலிலிட்ட ஆஹுதிபோல ப்ரயோஜனமற்றதென்று இந்த முகுந்தமாலை ச்லோகத்தினால் விரிவாகத் தெரிவிக்கப்படுகின்றது. ஆகவே வெறும் வைதிக கருமானுட்டானங்களைக் கொண்டே பெருமை கருதலாகாதென்பது விளங்கிற்று. ஆக, ஜாதியினால் ஏற்றமும் ஆச்ரமத்தினால் உயர்வும், கல்வியினால் சிறப்பும், ஒழுக்கத்தினால் உத்கர்ஷமும் பக்திப் பெருஞ் செல்வமில்லாதபோது சிறிதும் பயன்படாதென்பது தெளிவாயிற்று.

12. சாஸ்த்ரார்த்த தத்வமிருக்கும்படியைக் காட்டியாயிற்று. இந்த ப்ரமாணங்களில் எவர்க்கும் விப்ரதிபத்தி இராது.ஆனாலும் வர்ணாச்ரம வ்யவஸ்தையை மீறி இதர வருணத்தவர்களை உபசரிப்பதோ கௌரவிப்பதோ ஏலாது என்னுமபிஸந்தியினால் இவ்வர்த்த விசேஷங்களைச் சேமிக்கின்ற நாம் இவற்றை க்ஷேபிக்கின்ற பிறரும் நடத்தையில் ஒரு வாசியின்றிக்கேயிருப்பது ப்ரத்யக்ஷ ஸித்தம். ஆனால் இவ்வர்த்த விசேஷங்களை நம் பூருவர்கள் அவசியமாக எழுதி வைத்தது எதற்காகவென்றால், அவர்களுடைய காலத்திலும் பண்டைக் காலத்திலும் இருந்த லோகாதீத பரம விலக்ஷண பரம பக்த சிகாமணிகளைப் பற்றியே முக்கியமாக அருளிச் செய்ததாகும். இக்காலத்திலும் அப்படிப்பட்ட மஹா பாகவதோத்தமர்கள் *க்வசித் க்வசித்* என்றபடியே ஓரோவிடங்களிலே தோன்றுகை அஸம்பாவிதமன்று. அன்னவர் திறத்திலே நாம் ப்ரதிபத்தி குன்றாமே யிருக்கவேணு மென்பதை சிக்ஷிப்பதும் பூருவர்களின் கருத்தாகும். இது பற்றி இவ்வளவே போதும் ... ... *

### ப்ரபந்நதிநசர்யா நிரூபணம்

13. அத்யயந அத்யாபந பரம்பரையில் நான்கு பிரகரணமாகக் கொள்ளப்பட்டு வருகிற ஸ்ரீவசநபூஷணத்தில் இரண்டாவது ப்ரகரணத்தின் முடிவான சூர்ணையும், நான்காம் ப்ரகரணத்தின் முதல் சூர்ணையுமே மிகப்பெரியவை. ஸ்ரீபாஷ்யோபக்ரமத்தில் ப்ரஹ்மசப்தார்த்த விவரணத்தில் ப்ர்ஹத்த்வமுடையது ப்ரஹ்மம் என்று ஸாதித்து, மேலே ப்ர்ஹத்வஞ்ச ஸ்வரூபேண குணைச்ச'' என்று ஸாதிக்கிறார். உருவத்தில் பெருமையையிட்டும் குணங்களிற் பெருமையையிட்டும் 'இது பெரிது, அது பெரிது' என்று வழங்கி வருகிறோமென்கை. அப்படியே இரண்டு சூர்ணைகள் பெரியன என்றால் உருவத்தாலும் பெரியவை, அர்த்தபுஷ்டியாகிற குணத்தாலும் பெரியவை என்று சொன்னபடி. நாலாம்ப்ரகரணத்துச் சூர்ணையைப் பற்றி மேலே அநுபவிப்போம். ப்ரக்ருதம் த்விதீய ப்ரகரண சரம சூர்ணையை (223.) அநுபவிக்க விழிகிறோம். "இப்படி ஸர்வப்ரகாரத்தாலும் நாசஹேதுவான அஹங்காரத்துக்கும் அதினுடைய கார்யமான விஷயப்ராவண்யத்துக்கும் விளைநிலம் தானாகையாலே தன்னைக்கண்டால் சத்ருவைக் கண்டாற்போலேயும்'' என்று தொடங்கி "அநுகூலஸஹவாஸமும் ப்ரதிகூலஸஹவாஸ நிவ்ருத்தியும் ஸதாசார்ய ப்ரஸாதத்தாலே வர்த்திக்கும்படி பண்ணிக்கொண்டு போரக்கடவன்'' என்னுமளவாகவுள்ள திவ்யாத்புத சூர்ணையானது ப்ரபந்நாதிகாரியினுடைய திநசர்யாவிசேஷம் சொல்லுகிறது. இந்த திநசர்யையை நாம் சிறிதும் அனுட்டானத்தில் காட்ட முடியாதாயினும் இதைத் தெரிந்துகொண்டிருந்தால் ஒரு காலவிசேஷத்திலே பயன் படவுங்கூடும். அல்லது இதைத் தெரிந்துகொள்வதுதானே ஸ்வயம்ப்ரயோஜனமாகவுமாம். இங்குச் சுருக்கமாக விவரிக்கிறேன். எல்லாப்படியாலும் ஸ்வரூபத்தைக் கெடுக்கவல்ல அஹங்காரத்துக்கும் அதனாலே உண்டாகக்கூடிய விஷயப்ராவண்யத்துக்கும் பிறப்பிடம் தானாகையாலே, தன்னைக்கண்டால் சத்ருவைக் கண்டாற்போல குடல் கரித்துத் தன்னையே தனக்கு நாசகனாக நினைக்கவேணும்; தனக்குத்தான் சத்ருவாகாதபடி தன் ஸ்வரூபத்தை நோக்கிக் கொள்ள வேணுமென்பது இதன் கருத்து.

அந்த அஹங்காரத்தையும் விஷய ப்ராவண்யத்தையும் துர்ப் போதனைகளாலே வளரச் செய்கிற ஸம்ஸாரிகளைக் கண்டால் ஸர்ப்பத்தைக் கண்டாற்போலே அஞ்சி நடுங்கிப் பிற்காலித்திருக்கவேணும்;

அக்குற்றங்களை உபதேசாதிகளாலே போக்க வல்ல ஸ்ரீ வைஷ்ணவர்களைக் கண்டால் ஆப்த பந்துக்களைக் கண்டாற்போலே "இவர்கள் நமக்கு நல்துணையாவர்கள்'' என்று ஆதரித்திருக்கவேணும்;

எப்போதும் நம்முடைய ஹிதமே பார்த்துப் போருகிற ஈச்வரனைத் திருப்பதிகளிலே ஸேவிக்கப்பெற்றால் ஹிதைஷியான பிதாவைக் கண்டாற்போலே பக்தி ப்ரீதி விநயங்களையுடையவனாயிருக்கவேணும்; ஜ்ஞாந பக்தி விரக்திகளை விளைத்து பகவத் விஷயத்தைக் காட்டித் தரும் மஹோபகாரகனான ஆசார்யனைக் கண்டால் பெரும்பசியன் சோற்றைக் கண்டாற்போலே மிகவிருப்பத்தோடே அநுபவித்து உகந்திருக்கவேணும்;

தன் சொல்வழி யொழுகும் சிஷ்யனைக் கண்டால் அபிமத விஷயத்தைக் கண்டாற் போலே நினைத்து உள் குழைந்திருக்கவேணும்;

அஹங்காரம், அர்த்தம், காமம் இவை மூன்றின் கெடுதல்களை நன்கு சிந்திக்க வேணும்; அஹங்காரமானது அநுகூலரான ஸ்ரீ வைஷ்ணவர்கள் விஷயத்திலே அநாதரத்தைப் பண்ணுவிக்குமென்றும், அர்த்தமானது ப்ரதிகூலரான ஸம்ஸாரிகளோடே உறவு பண்ணு

விக்குமென்றும், காம [விஷய ஸம்போக ஸுக] மானது—இகழ்ந்து பிடரியைப் பிடித்துத் தள்ளுகிறவர்களிடத்திலும் விருப்பம் பிறப்பிக்குமென்றும் நன்கு ஆய்ந்து ஓய்ந்து உணர்ந்து பயப்படவேணும்; " சமம் தமம் முதலிய ஆத்ம குணங்கள் நம்முடைய முயற்சியாலும் கர்ம வச்யராயிருக்கிற பிறருடைய முயற்சியாலும் பிறப்பித்துக் கொள்ள முடியாது; ஆசார்ய னுடைய அநுக்ரஹ மூலமாக வருகிற எம்பெருமானுடைய அருளாலேதான் பிறக்கவேணும்'' என்று துணிவு உண்டாகவேணும்;

" தேஹ ரக்ஷணத்துக்கு உறுப்பான வியாபாரங்களில் விருப்பமற்றிருக்க வேணும்; பகவத் குணாநுபவ கைங்கர்ய ப்ரவ்ருத்திகளை மேன்மேலு மாசைப்பட்டிருக்கவேணும்; சோறு கூறை முதலிய ப்ராக்ருத வஸ்துக்களில் போக்யதா புத்தி தவிர்ந்திருக்கவேணும்; தேஹம் தரித்திருப்பதற்குப் போதுமான அளவு புஜிப்பதானது எம்பெருமானுடைய திருவராதனத்தின் ஸமாப்தி ரூபமான ஒரு ப்ரதிபத்திகர்மம் என்று நினைத்திருக்கவேணும்!

இந்த சரீரத்தோடே யிருக்கிற தனக்குத் தாபத்ரயத்தினுள் ஏதேனுமொரு வருத்த முண்டானால் ''இது அனுபவித்தே தீரவேண்டிய ப்ராரப்த கர்மத்தின் பலமன்றோ; இப்படிப் பட்ட கர்மங்கள் உள்ளவை கழியும் வரையிலன்றோ இந்த சரீரத்தோடு எம்பெருமான் நம்மை வைக்கிறது; அவனை அணுகுவதற்குத் தடையானவற்றிலே ஒன்றாகிலும் கழியப்பெற்றோமே!'' என்று அநுஸந்தித்தாவது (அல்லது) " துர்வாஸனையாலே இவ்வுடம்பை விடமாட்டாமல் சுவையற்ற விஷயங்களை யநுபவித்துக் கொண்டு ஸம்ஸாரத்துக்குள்ளே பொருந்தியிருக்கிற நம்மை இதில் நின்றும் கொண்டுபோக நினைக்கிற ஈச்வரன் இந்த சரீரத்தில் நமக்கு வெறுப்பு உண்டாவதற்காகவன்றோ இப்படி துக்கங்களை அனுபவிப்பிக்கிறான்; அவனுடைய க்ருபையின் பலமன்றோ இது'' என்று அநுஸந்தித்தாவது தேறியிருக்கவேணும்.

ப்ரபந்நனை தன்னுடைய அதிகாரத்துக்குத் தகுதியாகஅனுஷ்டித்துக் கொண்டு போருகிற நல்லொழுக்கங்களைப் பேற்றுக்கு உபாயமாக நினையாதிருக்க வேணும்; விலக்ஷண ருடைய ஞானமும் அனுட்டானமும் நமக்கு உண்டாக வேணுமென்று ஆசைப்பட வேணும்; திவ்ய தேசங்களில் அபிநிவேசம் கரைபுரண்டிருக்கவேணும்; மங்களாசாஸநத்தில் ஊற்ற முற்றிருக்க வேணும்; விஷயாந்தரங்களைக் காறி உமிழ வேணும்; ''கூவிக்கொள்ளுங்கால மின்னங் குறுகாதோ '' என்று ஆர்த்தியோடே யிருக்கவேணும்.

பகவத் பாகவத விஷயங்களில் தனது சேஷத்வத்துக்குத் தகுதியாகச் செய்யும் இழி தொழில்களையும் நியோக்திகளையும் ஸம்ஸாரிகள் விஷயத்திலே மறந்தும் செய்யாதொழிய வேணும்; எம்பெருமானுடையவும் பாகவதருடையவும் ப்ரஸாதங்களான வஸ்துக்களையே ஆஹாரமாகக் கொள்ளுவது தவிர மற்றவற்றைக் கொள்ளக்கடவோ மல்லோம் என்றிருக்க வேணும்; ஜ்ஞாநாநுஷ்டானங்களை வளர்க்கவல்ல அநுகூலரை ஒருநொடிப்பொழுதும் விட்டுப் பிரியாமலும், ஸ்வரூபத்தைக் கெடுக்கவல்ல ப்ரதிகூலரைக் கண்ணெடுத்துப் பாராமலுமிருக்க வேணும்; ஆக இவை யித்தனையும் ஆசார்யனுடைய அநுக்ரஹத்தாலே விளையக் கூடியவை யாதலால் அவ்வநுக்ரஹம் பரிபக்வமாம்படி சுச்ரூஷையிலே ஊன்றி நடந்து கொண்டால் இவையெல்லாம் கைகூடும் என்றதாயிற்று. ... ... ... *

## ஸர்வேச்வரன் சேதநோஜ்ஜீவனத்துக்குப் பண்ணும் க்ருஷிபரம்பரை

14. எம்பெருமானுடைய நிர்ஹேதுகக்ருபா வைபவத்தைப் பிள்ளை லோகாசார்யர்போல அருளிச்செய்த ஆசிரியர் எவருமில்லை. இவ்விஷயத்தில் இவர்க்கு இவரே நிகர். (381.) *த்ரிபாத்விபூதியிலே பரிபூர்ணநுபவம் நடவாநிற்க அது உண்டதுருக்காட்டாதே தேசாந்தரகதனான புத்ரன் பக்கலிலே பித்ருஹ்ருதயம் கிடக்குமாபோலே ஸம்ஸாரிகள் பக்கலிலே திருவுள்ளம் குடிபோய் இவர்களைப் பிரிந்தாலாற்றமாட்டாதே* என்று தொடங்கி—"என்னாரைச் சொன்னாய் என் பேரைச் சொன்னாய் என்னடியாரை நோக்கினாய் அவர்கள் விடாயைத் தீர்த்தாய் அவர்களுக்கு ஒதுங்கநிழலைக் கொடுத்தாய் என்றாப்போலே சிலவற்றை யேறிட்டு மடிமாங்காயிட்டு, பொன்வாணியன் பொன்னை உரைகல்லிலேயுரைத்து மெழுகாலேயெடுத்துக் கால்கழஞ்சென்று திரட்டுமாபோலே ஜந்மபரம்பரைகள் தோறும் யாத்ருச்சிகம் ப்ராஸங்கிகம் ஆநுஷங்கிகம் என்கிற ஸுக்ருதவிசேஷங்களைக் கற்பித்துக்கொண்டு தானே அவற்றை ஒன்று பத்தாக்கி நடத்திக்கொண்டு போரும்" என்றளவாக அருளிச்செய்துள்ள அற்புதமான சூர்ணையிலே பகவத்குணத்வேஷிகள் பலர் பகைகொண்டிருப்பர்களெனினும், *உள்ளுந்தோறும் தித்திக்கும்* என்னும்படியான இந்த சூர்ணையை மேலெழுந்தவாரியாகத் தெரியும் அர்த்தஜ்ஞானத்திலே த்ருப்தியடைந்து, மஹர்ஷிகள் நித்யம் மூன்று காலங்களிலே நமக்குவிதித்திருக்கும் அனுஷ்டானங்களோடுகூட, அல்லது அவற்றின் ஸ்தானத்திலே இந்த மஹாசூர்ணையை அநுஸந்தித்தால் *நம்மன்போலே வீழ்த்த முக்கும் நாட்டிலுள்ள பாவமெல்லாம், சும்மெனாதே கைவிட்டோடித் தூறுகள் பாய்ந்தனவே* என்று பெரியாழ்வாரருளிச்செய்த பேற்றைக் கையிலங்கு நெல்லிக் கனியாகக் காண்போமென்னத் தட்டில்லை. இதற்கு ஒருபேறுதானும் வேண்டா; இதை த்ரிஸந்த்யம் அநுஸந்திப்பதுதானே ஸ்வயம் ப்ரயோஜனமாகும். பல பாவங்களைக் கூடுபூரிக்கச் செய்து மூலையடியே திரிந்து ஒருநாள்வரையிலே அநுதாபம் பிறந்தபேர்கள் இந்த சூர்ணையை யநுஸந்தித்து மார்பிலே கைவைத்துறங்கலாமன்றோ. நம்முடைய வாழ்வுக்கு எம்பெருமான் இப்படி ஜன்மஜன்மாந்தரங்களாக க்ருஷிபண்ணிப் போராநிற்குமென்றால் 'இவர்கண்டாரோ? பார்த்தாரோ? என்று க்ஷேபிக்குமவர்கள்மலிந்த இந்நிலத்திலே இதை நிதியாக விச்வஸித்திருக்குமதொன்றே நமக்குப் பரமபாக்யமென்னத்தட்டில்லை. ... ... (*)

## "பாஷ்யகாரர் காலத்திலே...பின்பு பிறந்த வார்த்தைகள்."

15. (சூ. 385) "பாஷ்யகாரர் காலத்திலே ஒருநாள் பெருமாள் புறப்பட்டருளுந்தனையும் பார்த்துப் பெரிய திருமண்டபத்துக்குக் கீழாக முதலிகளெல்லாரும் திரளவிருந்தவளவிலே இவ்வர்த்தம் ப்ரஸ்துதமாக, பின்பு பிறந்த வார்த்தைகளை ஸ்மரிப்பது."—இதன் ஸம்க்ஷிப்த விவரணம் வருமாறு;—எம்பெருமானுடைய நிர்ஹேதுக விஷயீகாரஸ்தாபகமான இதிஹாஸமிது. ஸத்ஸம்ப்ரதாய மஹார்த்தங்களெல்லாம் ஸுபிக்ஷமாக விளங்கப்பெற்ற நல்லடிக்காலமான எம்பெருமானார்

காலத்திலே ஒருநாள் நம்பெருமாள் புறப்பாட்டை ப்ரதீக்ஷித்துக்கொண்டு பெரிய திருமண்டபத்துக்குக் கீழாக ஜ்ஞாநாதிகரான முதலிகளெல்லாரும் திரளவிருந்த வளவிலே, [பெருந்திரளிலே ஒருவர் ஒன்றுபேசத் தொடங்குகிற கணக்கிலே] ஒரு ஸ்ரீவைஷ்ணவர் ஆஸ்தாவித்தாராம்—கீழ்க்கழிந்த காலமெல்லாம் ஆர்வாசவிலே யாருடைய புறப்பாட்டை எதிர்பார்த்திருந்தோமோ தெரியாது, இன்று ஆப்த சேஷியான பெருமாளுடைய புறப்பாட்டை ப்ரதீக்ஷித்திருக்க என்ன ஸுக்ருதம் பண்ணினோமோ? என்று.... இந்த ஆஸ்தாவத்தின் மேலே வார்த்தை மேல் வார்த்தையாக "நித்ய ஸம்ஸாரியாய்ப் போந்தவனுக்கு ஒரு நாளிலே பகவத் விஷயத்தில் ருசிபிறப்பதற்கு யாது காரணம்" என்கிற சர்ச்சை கிளர்ந்ததாம். அப்போது, யாத்ருச்சிகஸுக்ருத மென்றாரொருவர், அஜ்ஞாத ஸுக்ருத மென்றாரொருவர். அவ்வளவிலே அங்கிருந்த கிடாம்பிப்பெருமாளென்பவர் "நமக்கு பகவத் விஷயம்போலே ஸுக்ருத தேவனென்றும் ஒருவருண்டோ ஆச்ரயணீயர்?" என்றாராம். அதன்மேல் பிள்ளை திருநறையூரரையர், "ஸுக்ருதமென்று சொல்லுகிறதும் அந்த எம்பெருமானையே காணும்" என்றாராம். இத்தால் தேறினதென்னவென்றால், அஜ்ஞாத ஸுக்ருத முண்டாயிற்றாலும் அது புருஷார்த்த ஹேதுவன்று; அத்தை வ்யாஜமாக்கி அங்கீகரித்தருளும் எம்பெருமானே புருஷார்த்த ஹேது-என்பதாம். ... ... ... ... ... (*)

"பயஹேது கர்மம், அபயஹேது காருண்யம்; பயாபயங்களிரண்டும் மாறிமாறி ப்ராப்தியளவும் நடக்கும்".

16. ஸ்ரீவசன பூஷணத்திற்கு சரமபர்வநிஷ்டாப்ரகரணமே ஜீவநாடியென்று மணவாளமாமுனிகள் திருவுள்ளம் பற்றுகிறார். க்ரந்த ஸந்நிவேசமும் அப்படித்தானே யுள்ளது. அந்த மஹார்த்தம் எழுவதற்கு பூர்வபீடிகையாகவுள்ளது "பயஹேது கர்மம்" இத்யாதியான மேலே குறித்த ஸ்ரீஸூக்தி. ஒன்றின் ஏற்றம் தெரியவேணுமானால் மற்றொன்றின் தாழ்வு தெரிந்தேயாக வேணுமன்றோ. சரமபர்வத்தின் ஏற்றம் தெரிவதற்கு ப்ரதம பர்வத்தின் தாழ்வு ப்ராமாணிகமான முறையில் தெரிவிக்கவேண்டியதாகிறது அது தெரிவிக்கலாகிறது. இங்கிருக்கும் நாளிலே நமக்கு ஒரு பயம் உண்டாகியே தீருகின்றது. அநாதிகாலமாக ஸம்ஸரித்துப் போருவதற்குக்காரணம் நம்முடைய கர்மமாகையாலே அந்த கர்மத்தை நினைக்கும்போது பயமுண்டாகின்றது. இனி, 'ஸம்ஸாரபந்தம் நம்மருகும் வர மாட்டாது. மரணமானால் வைகுந்தம் திண்ணம்' என்று நிர்ப்பரனாயிருப்பதற்கு ஹேதுவாக அவனுடைய காருண்யம் விளங்குமாகையாலே அதனை நினைக்கும் போது பயநிவ்ருத்தி யுண்டாகிறது. ஆனால் பயமும் நித்யமாய்ச் செல்வதன்று. பயநிவ்ருத்தியும் நித்யமாய்ச் செல்வதன்று. இவ்விருள்தருமாஞாலத்தில் இருக்கும் நாள்வரையில் கருமத்தை நினைத்து பயப்படுகையும் அதனையறுத்துத் தொலைக்கவல்ல பகவத் கருணையை நினைத்து பயங்கெட்டிருக்கையும் மாறிமாறிச் செல்லாநிற்கும். இங்ஙனன்றிக்கே எப்போதும் அச்சங்கெட்டிருக்கு மிருப்புக்கு வழியில்லையோ வென்னில்: ஏனில்லை? அது அடுத்தபடியாகச் சொல்லப்படுகிறது.

"ஸ்வதந்த்ரனை உபாயமாகப்பற்றினபோதிறே இப்பூஸங்கந்தானுள்ளது."

17. இந்த ஸ்ரீவசந பூஷண திவ்யசாஸ்த்ரத்தில் முதலே பிடித்து இவ்வள வாக ஸித்தோபாயபூதனான ஸர்வேச்வரனே சேதநர்க்கு மோக்ஷஸித்திக்கு உறுப் பானவனென்று சொல்லிவந்து, அந்த ஸர்வேச்வரன் கேட்பாரற்ற ஸ்வதந்த்ர னுகையாலே கருமங்காரணமாக நிக்ரஹிக்கவும் கருணைகாரணமாக அநுக்ரஹிக்க வுங் கடவனுகையாலே கருமத்தைநோக்கி பயப்படுகையும், கருணையைநோக்கி பயங்கெட்டிருக்கையும் முடிவுவரையில் மாறி மாறிச் செல்லுமென்று கீழே முடிக் கப்பட்டது. *ஸாக்ஷாத் நாராயணோ தேவ: க்ருத்வா மர்த்யமயீம் தநும், மக்நாநுத் தரதே லோகாந் காருண்யாத் சாஸ்த்ரபாணிநா* என்று சொல்லுகையாலே ஸித்தோபாயமான ஸர்வேச்வரனிற்காட்டில் வேறுபட்டதன்றிக்கே தச்சரமாவதி யாய், ஸம்ஸாரமோக்ஷங்களிரண்டுக்கும் பொதுவாயிருக்கையன்றிக்கே மோக்ஷத் துக்குமட்டுமே ஹேதுவாய், ஒருகாலும் அஞ்சவேண்டாதே எப்போதும் பயமற்றி ருக்கும்படியான சரமோபாயம் ஸதாசார்யாபிமானமேயென்று தெளிந்து அந்த நிஷ்டையிலே ஊன்றியிருப்பார்க்கு பயப்ரஸக்தியில்லை. இங்ஙனே சொன்னவித் தால் ஸர்வேச்வரனிடத்திலே ப்ரதிபத்தியைக் குலைத்துக்கொண்டதாக அர்த்தம் கொள்ளலாகாது. உடனே "ஈச்வரனைப்பற்றுகை கையைப்பிடித்துக் காரியங் கொள்ளுமோபாதி; ஆசார்யனைப்பற்றுகை காலைப்பிடித்துக் காரியங்கொள்ளுமோ பாதி" என்றருளிச்செய்கையாலே. அவயவி ஒன்றேயென்றும் அவயவபேதம் மட்டுமேயென்றும் தெரிவிக்கப்பட்டதாயிற்றன்றோ. அன்றியும் (436.) "உபகார்ய வஸ்து கௌரவத்தாலே ஆசார்யனிற்காட்டில் மிகவும் உபகாரகன் ஈச்வரன்" என்கிற சூர்ணையினால் எம்பெருமானுடைய ஏற்றம் மிக அற்புதமாக மூதலிக்கப் படுகிறது. இந்த சூர்ணையை விவரித்தால் ஆசார்யனுக்கு ஏற்றமும் எம்பெருமா னுக்குத் தாழ்வுந்தானே ஏற்படுமென்று சொல்லிவிடவேண்டா; பந்தமோக்ஷங் களிரண்டுக்கு முறுப்பன்றிக்கே மோக்ஷத்திற்கே ஹேதுவான ஆசார்யனை உப கரித்தவன் ஈச்வரன் என்கிற த்ருஷ்டியோடே எம்பெருமானுடைய ஏற்றத்தை யுணர்ந்து உகந்திருப்பது. ... ... ... .... (*)

"பிள்ளை பலகாலுமருளிச் செய்யக் கேட்டிருக்கையாயிருக்கும்"

18. (சூர்ணை 443.) "ஸ்வாபிமாநத்தாலே ஈச்வராபிமாநத்தைக் குலைத்துக் கொண்டவிவனுக்கு ஆசார்யாபிமாந மொழிய கதியில்லையென்று பிள்ளை பலகாலுமருளிச் செய்யக் கேட்டிருக்கையாயிருக்கும்."—ஸ்ரீவசநபூஷண திவ்ய சாஸ்த்ரத்திற்கு இதுவே சிகரமான சூர்ணை. கீழே "த்ரிபாத் விபூதியிலே" என்றெடுத்துக் காட்டின சூர்ணை மிகப் பெரிதாகையாலே அது தன்னைக் கண்டஸ்தமாக்கிக் கொள்ள அருமையுண்டு. இந்த சூர்ணை அது போலன்றிக்கே சிறிதாகையாலே கண்டஸ்தமாக்கி நித்யாநுஸந்தானம் பண்ணப்ராப்தம். *ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்* என்கிறபடியே ஸஹஜ ஸௌஹார்தசாலியான எம்பெருமான் நம்மை அபிமானித்து நமக்கு ஆவன செய்யுமவனே யாயினும், *த்வத் ஸர்வ சக்தேரதிகா அஸ்மதாதே: கீடஸ்ய சக்திர் பத! ரங்கபந்தோ!, யத் த்வத் க்ருபாமப்யதி கோமகாரந்யாயாத் அஸௌ நச்யதி ஜீவநாமம்* என்று

ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலே பட்டர் அருளிச் செய்தபடியே நம்முடைய துரபிமானத்தாலே அவனது கருணையும் நம்மேல் ஏறிப்பாய வொண்ணுதபடி அவனபிமானத்தை நாம் குலைத்துக் கொள்ளுகிறோம். ஆகவே நமக்கு ஈச்வராபிமானம் கார்யகரமாகிறதில்லை. ஈச்வரனைப் போலே ஆசார்யனும் நம்மையபிமானிப்பதுண்டு. இதையும் நாம் நமது துரபிமானத்தாலே குலைத்துக் கொள்வோமென்பதில் ஐயமில்லை. ஆனுல், ஈச்வராபிமானம் போலே ஆசார்யாபிமானம் பழுதுபடுவதில்லை. நாம் விலகிக் கொள்ளப் பார்த்தாலும் "நீ என்னை விட்டாலும் உன்னை நான் விடேன்காண்" என்றிருக்கும் ஆசார்யனுடைய அபிமானம் நம்மையுஜ்ஜீவிப்பித்தே நிற்கும் என்று நம்பிள்ளை பக்கலிலே ஸகலார்த்தங்களும் சிக்ஷிக்கப் பெற்ற வடக்குத் திருவீதிப்பிள்ளை பலகாலு மருளிச் செய்வராம். ஆகவே, ஆசார்யனை நாம் பற்றுகிற பற்றைக் காட்டிலும் ஆசார்யன் இவன் நம்முடையவன் என்று உகந்து அபிமானிக்குமதுவே நமக்கு உத்தாரக மென்றதாயிற்று. ... ... (*)

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

அஷ்டாதசாஷ்டாதசமஹார்த்தநிதியில்
ஸ்ரீவசனபூஷணப் பதினெட்டு முற்றிற்று.

## ஸம்ப்ரதாய ரஸிகர்களுக்கு ஸவிநய விஜ்ஞாபனம்.

முமுக்ஷுப்படியில் பதினெட்டு என்பதும், தத்வத்ரயத்தில் பதினெட்டு என்பதும் ஒருவாறு த்ருப்திகரமாகவே முடிந்தன. ஸ்ரீவசனபூஷணத்தில் பதினெட்டென்கிற இதுவும், ஆசார்ய ஹ்ருதயத்தில் பதினெட்டென்கிற அடுத்த பரிச்சேதமும் கடல் போலே அநுபவிக்க வேண்டியவையேயன்றி இங்ஙனே குட்டமாக அநுபவிக்க வுரியனவல்ல, நானூற்றறுபத்துமூன்று சூர்ணைகள் கொண்ட ஸ்ரீவசநபூஷணத்தில் ஒரு பதினெட்டு விஷயங்களைமட்டு மெடுத்து அநுபவித்தவளவால் என்ன த்ருப்தியாகும். ஒன்றுமாகாதுதான். ஆனுலும் இந்த திவ்ய சாஸ்த்ரத்தில் ருசியை விளைப்பதற்கு இந்த ஸம்க்ஷேபம் பர்யாப்தமென்று கொள்ளப்பட்டது. லௌகிகர்களாய் உத்தியோகஸ்தர்களாய் ஸத்ஸம்ப்ரதாயார்த்த புபுத்ஸுக்களாய்வாழும் நாகரிகர்களுக்கு இவ்வளவே பர்யாப்தமென்று நிற்கிறேன்.

(ஸ்ரீ. அ.)

ஸ்ரீ:
ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# அஷ்டாதசாஷ்டாதசமஹார்த்தநிதியில்

# ஆசார்யஹ்ருதயப் பதினெட்டு

## நூலாசிரியரின் வரலாறு முதலியன

1. ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் தோன்றியுள்ள நூல்களுள் ஆசார்யஹ்ருதயம் என்பது மிகச்சிறந்தது. நம்மாழ்வாரருளிச்செய்த திருவாய்மொழிக்கு "தெள்ளியதா நம்பிள்ளை செப்பு நெறிதன்னை, வள்ளல் வடக்குத் திருவீதிப்பிள்ளை. இந்த நாடறிய மாறன் மறைப் பொருளை நன்குரைத்தது. ஈடுமுப்பத்தாறாயிரம்" என்று உபதேசரத்தினமாலையில் மணவாள மாமுனிகள் அருளிச்செய்தபடி மிகச்சிறந்த வியாக்கியானமாகிய [பகவத்விஷயமென வழங்கப் படுகிற] ஈடு முப்பத்தாறுயிரப்படியை அருளிச்செய்தவரான வடக்குத்திருவீதிப்பிள்ளை யென்னுமாசிரியர்க்கு இரண்டு திருக்குமாரர்கள் தோன்றியிருந்தனர். அவர்களுள் மூத்தவர் பிள்ளை லோகாசார்யரென்று உலகம் போற்ற நின்ற ஆசிரியராவர், இளைய திருக்குமாரர் அழகிய மணவாளப்பெருமாள் நாயனர் என்னுமாசிரியர் இவ்விருவரும் இவ்வுலகுக்குச் செய்தருளிய பேருதவி கைம்மாறிலாதது. ஸ்ரீவசனபூஷணம், முமுக்ஷுப்படி முதலிய அஷ்டாதச (18) ரஹஸ்ய திவ்யக்ரந்தங்களை யருளிச்செய்தவர் மூத்தவரான பிள்ளைலோகாசார்யர். அவருடைய திருத்தம்பியாரான அழகிய மணவாளப்பெருமாள் நாயனர் என்னுமிவர் அருளிச் செய்தவை—திருப்பாவைக்கு ஆறுயிரப்படி வியாக்கியானம், அமலனுதிபிரான் வியாக்கியானம், கண்ணிநுண் சிறுத்தாம்பு வியாக்கியானம், பட்டோலை யென்பதோர் ரஹஸ்யம், ஆசார்யஹ்ருதயம் முதலியன. இவற்றுள் ஆசார்யஹ்ருதயமென்னும் நூலின் பெருமையைப் பேச நினைக்கவும் நாம் அதிகாரிகளல்லோம். இவ்வரிய பெரிய நூலின் பெயரைக் கேள்விப்படாதவர்கள் பலர் இருக்கலாம். கேள்விப்பட்டவர்களிலும் பலர் "ஸ்ரீவசனபூஷணம்" முதலிய மற்ற நூல்களைப்போல் இதுவுமொரு நூல்" என்று இவ்வளவே க்ரஹித்திருக்கக்கூடும்; நூலினுள் இறங்கி ஆராய்ச்சி செய்திரார்கள். இந்நூலில் பரிசயமுள்ளவர்களும் பெரும்பாலர் இதன் அருமை பெருமைகளை ஆழ்ந்து அறியப்பெற்றிலர் என்றால், இப்பேச்சில் யாரும் குறை கூற நேராது. "மற்ற நூல்களைப்போலல்லாமல் இதுவொரு விலக்ஷணமான நூல்; மிகச் சிறந்த நூல்" என்று இவ்வளவு க்ரஹித்திருப்பவர்கள் சிலருளர். அந்தச் சிறப்பு எப்படிப் பட்டதென்பதை உலகமெல்லாமறிய நன்கு விளக்கிக் காட்டவேணுமென்னுமாசை நமக்கு எழுந்துளது. சிறிதளவே விளக்கிக் காட்டலாகிறது.

## ஆசார்யஹ்ருதயத்திருநாமப் பொருள் விளக்கம்

2. இவ்வுலகில் அன்றுதொட்டு இன்றுறுதியாகத் தோன்றியுள்ள திவ்விய நூல்களில் ஆசார்யஹ்ருதயத்திற் கொப்பானதொரு க்ரந்தம் இதுவரையில் தோன்றவுமில்லை, இனித் தோன்றப்போகிறதுமில்லை. உபநிஷத்துக்கள், இதிஹாஸ புராணங்கள், ஆழ்வாராசார்ய ஸ்ரீஸூக்திகள் எல்லாம் ஒருங்கே திரண்டு இந் நூலாக வடிவெடுத்திருக்கிறதென்பது உண்மை யுரை. ஆசார்யஹ்ருதயம் என்கிற சொல்லானது 'ஆசார்யருடைய திருவுள்ளம்' என்னும்

பொருள்பெற்றுள்ளது. வைதிக ஸந்தானத்திற்கு ப்ரதம ஆசார்யரான நம்மாழ்வார் அருளிச் செய்த திவ்யப்ரபந்தங்களில் அவருடைய திருவுள்ளக் கருத்துக்களைத் தெளிய வெளியிடுகையாலே, இந் நூலுக்கு ஆசார்யஹ்ருதயமென்று பெயராயிற்று என்பர் பெரியோர். நம்மாழ்வாரென்கிற ஒரு ஆசார்யருடைய திருவுள்ளத்தை மாத்திரம் வெளியிடாமல் ஸகல பூர்வாசார்யர்களுடையவும் திருவுள்ளக் கருத்துக்களை யெடுத்துரைத்திருப்பது இந் நூலாதலால் "ஆசார்யர்களின் ஹ்ருதயம்" என்கிற பொருளும் பொருந்தும். இந்நூலின் அர்த்தங்கள் மிகவும் அதிசயிக்கத் தக்கவை யென்பது ஒருபுறமிருக்க, அர்த்தத்தைக்காட்டிலும் சொல்தொடைதானே மிகவும் இனிதாயிருக்குமென்பது, இதில் ஸ்வல்ப பரிசயம் பண்ணினவர்களுக்கும் எளிதாகத் தெரியவரும். *செவிக்கினிய செஞ்சொல்* என்று, திருவாய்மொழிக்கு ப்ரஸித்தியிருந்தாலும் உண்மையாகச் செவிக்கினிய செஞ்சொல் இந் நூலொன்றேயாகும். இந் நூலின் அரியபெரிய பொருள்களை உள்ளவாறு உணரப்பெறுவதும் நெஞ்சில் தரிக்க வைத்துக்கொள்வதும் எப்படிப்பட்ட மாஞானியர்க்கும் எளிதன்று. நாடோறும் இதில் மூலத்திலும் வியாக்கியானத்திலும் அவகாஹித்துக்கொண்டேயிருப்பார்க்கும் இதன் ஆழ்பொருள்கள் அறியவரியனவே. இந் நூலில் ஒவ்வொரு சொல்லும் பெரும்பாலும் ப்ரமாணவசனத் தொகுதியேயாகும். ஆசிரியர் தம்முடைய சொந்த வாக்காக எழுதும் வார்த்தைகள் மிகச் சிலவே. நூற்றுக்குத் தொண்ணூற்றைந்து வார்த்தைகள் வடமொழி மேற்கோள்களும் தென்மொழி மேற்கோள்களும் வடிவெடுத்தவை. இங்ஙனே நாம் எழுதிவிடுவதனால் பயனில்லை. இதை விளக்கிக்காட்டி வாசகர்களுக்குப் பேரின்பமளிக்கின்றோம்.

### முதல் சூர்ணையின் விவரண முகத்தால் நூல்நிலைமை காட்டுதல்

3. இந் நூலில் ஒவ்வொரு சிறிய பெரிய வாக்யமும் சூர்ணை யெனப்படும். முதல் சூர்ணை யொன்றைமாத்திரம் எடுத்துக்கொண்டு அது அமைந்திருக்கு மழகை விவரித்துக் காட்டுதும்.

*"காருணிகனான ஸர்வேச்வரன் அறிவிலாமனிசர் உணர்வென்னும் சுடர் விளக்கேற்றிப் பிறங்கிருள் நீங்கி மேலிருந்த நந்தா வேதவிளக்கைக்கண்டு நல்லதும் தீயதும் விவேகிக்கைக்கு மறையாய்விரிந்த துளக்கமில் விளக்கில் கொளுத்தின ப்ரதீபமான கலைகளை நீர்மையினா லருள்செய்தான்."*

இது இந் நூலின் முதல் சூர்ணை. இதில் நூலாசிரியருடைய சொந்தமான சொல் ஒன்றுகூட இல்லை. சொல்தொடை மாத்திரமே இவருடையது. சொற்கள் யாவும் பூருவர்களின் திவ்யஸூக்திகளிலிருந்து அற்புதமாகத் திரட்டப்பட்டுள்ளன. 1. பட்டரென்கிற ஆசிரியருடைய வடமொழி ச்லோகமொன்று; 2. திருமாலைப் பாசுரமொன்று; 3. பேயாழ்வார் பாசுரமொன்று; 4. பூதத்தாழ்வார் பாசுரமொன்று; 5. திருமங்கையாழ்வார் பாசுரங்கள் ஐந்து; 6. பெரியாழ்வார் பாசுர மிரண்டு; 7. நம்மாழ்வார் பாசுர மிரண்டு. 8. திருமழிசையாழ்வார் பாசுர மொன்று. ஆக இவ்வளவு (14) திவ்ய ஸ்ரீஸூக்திகளைக் கொண்டு இந்த வொரு சூர்ணை நிருமிக்கப்பட்டுள்ளது. இதில் அடங்கியுள்ள அந்த ஸூக்திகளை விவரித்துக் காட்டுகிறேன்;

**(1) *ஹர்த்தும் தமஸ் ஸதஸதீ ச விவேக்துமீசோ மாநம் ப்ரதீபமிவ காருணிக:* இது பட்டருடைய திருவாக்கு. (2) *அறிவிலா மனிசர்* இது திருமாலைப் பாசுரம். (3) *உய்த்துணர்வென்னு மொளிகொள் விளக்கேற்றி* இது பேயாழ்வார் பாசுரம். (4) *ஞானச் சுடர்விளக் கேற்றினேன்* இது பூதத்தாழ்வார் பாசுரம். (5) *பிறங்கிருள் நிறங்கெட* நந்தா விளக்கே* *மறையாய் விரிந்த விளக்கை* *வந்து**

பன்னுகலை நால்வேதப் பொருளை யெல்லாம் பரிமுகமாயருளிய *கலைகளும் வேதமும் நீதிநூலும்* இவையைந்தும் திருமங்கையாழ்வார் பாசுரங்கள். (6) *பின்னிவ்வுலகினில் பேரிருள் நீங்க* *வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கு* இவை பெரியாழ்வார் பாசுரங்கள். (7) *இவையன்றே நல்ல இவையன்றே தீய* *மிக்கஞானமூர்த்தி யாய வேத விளக்கினைக் கண்டு* இவை நம்மாழ்வார் பாசுரங்கள். (8) *துளக்கமில் விளக்கமாய்* இது திருமழிசையாழ்வார் பாசுரம்.

ஆக இத்தனை பாசுரங்களிலுள்ள சொற்களை, தாம் கூற விரும்பிய பொருளுக்குத் தக்கவாறு கண்டங்களாக வெடுத்துத் திரட்டி ஒரு சூர்ணையமைத்துள்ள அதிசயம் என்னே!

## முதல் சூர்ணையில் கையாண்ட மேற்கோள்களின் விளக்கம்

4. இந்த முதல் சூர்ணையில் இவ்வாசிரியர் வெளியிட விரும்பிய விஷயம் யாதெனில், சிறிதும் விடாமல் அதை நம்முடைய வாக்கியமாக எழுதிக் காட்டுகிறோம்;

அறிவிலிகள், ஞானவிளக்கையேற்றி நிபிடமான அகவிருள் நீங்கப்பெற்று எம்பெருமானாகிற விளக்கைக்கண்டு நன்று தீதுகளைப் பகுத்துணருகைக்காக, அகாரமாகிற விளக்கில் கொளுத்தின சாஸ்த்ரங்களாகிற விளக்கைப் பேரருளாளப்பெருமான் அருள்செய்தான். இதுவே இந்த முதல் சூர்ணையின் விஷயம். இதைத் தம் திருவாக்கால் அமைத்தருளாமல் முன்னோர்களது மொழிகளைக்கொண்டே வெகு அழகாக வெளியிட்டுள்ளார். 'பகவான் பரமகருணையாலே சாஸ்த்ரங்களை உபகரித்தான்' என்கிற விஷயத்தைத் திருமங்கையாழ்வார் ஒரு பாசுரத்தாலும், பட்டர் ஒரு ச்லோகத்தாலும் கூறியிருக்கையாலே, அவ்விரண்டு மேற்கோள்களையும் எடுத்தாள விரும்பிய ஆசிரியர், ஆதியில் காருணிகனான ஸர்வேச்வரன் என்றதனால் "மாநம் ப்ரதீபமிவ காருணிகோ ததாதி" என்கிற பட்டர் ஸ்ரீஸூக்தியையும், முடிவில் நீர்மையினாலருள்செய்தான் என்றதனால் "கலைகளும் வேதமும் நீதி நூலும் கற்பமும் சொற்பொருள்தானும், மற்றை நிலைகளும் வானவர்க்கும் பிறர்க்கும் நீர்மையினாலருள் செய்து" என்கிற திருமங்கையாழ்வார் பாசுரத்தையும் தொகுத்தருளினார். பகவான் இப்படிப்பட்ட பேருதவி செய்தருளினது ஜ்ஞானஹீனர்களான மனிசர்களுக்காக வென்று கூற விரும்பிய ஆசிரியர் அதையும் தமது சொல்லால் சொல்லாது அறிவிலா மனிசர் என்றிட்டுச் சொன்னது "அறிவிலா மனிசரெல்லாம்" என்கிற திருமாலைப் பாசுரத்தை நினைப்பூட்டவே. மனிசர் அறிவில்லாதவர்கள் என்பதற்கு ஒரு மேற்கோள் காட்டவேண்டிய அவசியமில்லையானாலும், கூடுமான வரையில் பெரியோர்களின் ஸ்ரீஸூக்திகளையிட்டே பணிக்கவேணுமென்று இவ்வாசிரியரின் திருவுள்ளமென்பது இதனால் நன்கு விளங்கும். "முன்னோர் மொழிபொருளே யன்றி அவர் மொழியும் பொன்னேபோல் போற்றுவம்" என்ற நன்னூல் நினைக்கத்தக்கது

## முதல் சூர்ணையில் அபூர்வ ஆராய்ச்சியும் பாடத்திருத்த மொன்றும்

5. இங்கு ஒரு சிறிய சங்கை ஆராய்ச்சிப் புலவர்களுக்குத் தோன்றக்கூடியதுண்டு; அதாவது—முதலில் காருணிகனான என்றிட்டது "காருணிகோ ததாதி" என்கிற பட்டர் ஸ்ரீஸூக்தியைக் காட்டுதற்கேயன்றோ; அந்த பட்டர் ச்லோகத்தில் "விமேச்வம் ஈச: ததாதி" என்றிருக்கிறதே யொழிய ஸர்வேச்வர: என்றில்லையே. ஆகவே, "காருணிகனான ஈசன்" என்று ஆசிரியர் பணித்திருக்க வேண்டுமே; 'ஸர்வேச்வரன்' என்று வேறு சொல்லையிட்டுப் பணித்தது ஏன்? என்பதாம். இந்த சங்கைக்குப் பரிஹாரம் வெகு நுட்பமான ஆராய்ச்சியினால் பெறவேண்டி யிருக்கின்றது. கேண்மின்; பகவான் சாஸ்த்ரங்களை யுதவினன் என்கிற

விஷயத்தை பட்டர் போலவே திருமங்கையாழ்வாரும் கூறியுள்ளாரென்றும், அவருடைய பாசுரமும் இதே சூர்ணையில் தொகுக்கப்பட்டுள்ளதென்றும் மேலே தெரிவித்தோமல்லவா? அந்தப் பாசுரத்தில் *கலைகளும் வேதமும் நீதிநூலும்...... வானவர்க்கும் பிறர்க்கும் நீர்மையினு லருள்செய்து* என்று, மண்விண்ணுலகத்தாரோடு வாசியற ஸர்வ ஜனங்களுக்கும் அருள் செய்த தாகச் சொல்லியிருப்பதைத் திருவுள்ளத்திற்கொண்டு அதையும் காட்டவேண்டி ஸர்வேச்வரன் என்றுரென்க. இதுவியாக்கியானத்தில் காட்டப்படாமலிருந்தாலும் இப்படி நுட்பமாக ஆய்ந்து அறியவேண்டியவையும் இந்நூலில் பலவுள்ளன. இதற்குமேல், ஞானவிளக்கையேற்றி என்று கூற நினைத்த ஆசிரியர் அதையும் தமது சொல்லால் சொல்லாமல் ஆழ்வார் பாசுரத்தா லேயே சொல்ல நினைத்து, அவ் விஷயத்திற்குப் பூதத்தார் பாசுரமொன்றும், பேயார் பாசுர மொன்றுமாக இரண்டு மேற்கோள்கள் காட்டத் திருவுள்ளம்பற்றி உணர்வென்னும் சுடர் விளக்கேற்றி என்ற சொல்தொடர் அமைத்திருப்பதான து மிகவற்புதம். இதனுல் *உய்த்துணர் வென்னு மொளிகொள் விளக்கேற்றிவைத்து* என்கிற பேயரர் பாசுரமும், *ஞானச் சுடர்விளக் கேற்றினேன்* என்கிற பூதத்தார் பாசுரமும் நன்கு காட்டப்பட்டன. "உணர்வென்னும் விளக் கேற்றி" என்றே "ஞான விளக்கேற்றி" என்றே மூலமியற்றியிருந்தாலும் இங்கு ஆசிரியர்க்கு விருப்பமான பொருள் தோன்றக் குறையில்லை ஆனாலும், மேற்கோள்களை அதிகமாகக்காட்டி யருளவேணுமென்கிற விருப்பமே இப்படிச் சொல்தொடரை அமைக்கப் பண்ணிற்று. இந்த ஸந்தர்ப்பத்தில் மிக முக்கியமாக இங்குத் தெரிவிக்கவேண்டியதொன்றுண்டு; இந் நூலைக் கண்டபாடஞ் செய்து தரித்தாலொழியப் பயனில்லை. அப்படிக் கண்டபாடம் செய்திருப் பவர்கள் சிலரே யாவர். அவர்களும் பலவிடங்களில் தவருன—மிகத் தவறன பாடங்களை அந்த பரம்பரையாய் ஆதரித்துள்ளார். இப்போது நாமெடுத்து விவரித்த இவ்விடத்தில் "உணர் வென்னும் சுடர்விளக்கேற்றி" என்று பாடம் பண்ணுமல் 'உணர்வெனும் சுடர்விளக்கேற்றி' என்றே பலரும் பாடம்செய்துள்ளார்கள். ஆசிரியர் எந்த ஆழ்வார் ஸ்ரீஸூக்தியைக் கொண்டு இவ் வாக்கியம் இட்டருளினுரோ அந்த ஸ்ரீஸூக்தியில் "உணர்வென்னும்" என்றுள்ளதே யல்லாது "உணர்வெனும்" என்று (தொகுத்தல் விகாரமாக) இல்லை; திருமங்கையாழ்வா ருடைய 'வாடினேன் வாடி' யென்கிற பாசுரத்தில் "உணர்வெனும் பெரும்பதம்" என் றுள்ளது. ஆனல்; அந்தப்பாசுரத்திற்கு இங்கு ப்ரஸக்திலேசமுமில்லை. "உய்த்துணர் வென்னு மொளிகொள் விளக்கேற்றி" என்கிற பேயாழ்வாருடைய வெண்பாவே இங்கு விஷயமாதலா லும், அதில் தொகுத்தல் விகாரமில்லாமையாலும், இல்லாதவிகார மொன்றைப் புகுத்த யார்க்கும் அதிகாரமில்லாமையாலும் "உணர்வென்னும் சுடர்விளக்கேற்றி" என்பதே சுத்தமான பாடம் அந்தபரம்பரையினுல் வந்த தவருன பாடம் தவிர்க்கத் தக்கது என்பது இங்கு ப்ராஸங்கிகம்.

### "பிறங்கிருள் நீங்கி" என்ற அமைப்பிலுள்ள சாதுர்ய விவரணம்

6. பிறகு, நிபிடமான அகவிருள் நீங்கப்பெற்று என்று ஆசிரியர் தாம் கூற விரும்பிய விஷயத்தையும் ஆழ்வார் பாசுரத்தாலேயே சொல்லப்புகுந்து, இதற்கும் இரண்டு பாசுரங்களைக் காட்டவேண்டிப் பிறங்கிருள் நீங்கி என்ற சொல்தொடர் அமைத்தது பரம சாதுர்யம் இதில் இரண்டு ஆழ்வார்களின் பாசுரங்கள் அமைக்கப்பட்டுள்ளன. *பின்னும் வானவர்க்கும் முனிவர்க்கும் நல்கிப் பிறங்கிருள் நிறங்கெட* என்பது திருமங்கையாழ்வாரருளிச்செயல். *பின்னிவ்வுலகினில் பேரிருள் நீங்க* என்பது பெரியாழ்வார் பாசுரம். இவ்விரண்டு பாசுரங் களையும் சேரத் திரட்டியிருக்கு மழகு காண்மின்; இங்கு மூலம் "பிறங்கிருள் நீங்கி" என்றுள்ளது. பிறங்கு என்பதனுல் திருமங்கையாழ்வார் பாசுரத்தைக் காட்டினர். 'பிறங்கிருள்

நிறங்கெட்டு' என்றுவ 'பேரிருள் நீங்கி' என்றுவது மூலமியற்றி யிருந்தால் ஆசிரியர்க்கு விருப்பமான பொருள் தோன்றுமல் போகாது, தோன்றியே தீரும்; ஆனாலும், இரண்டு மேற்கோள்கள் காட்டின சுவை தோன்றுதன்றோ? பல மேற்கோள்கள் காட்டப்பட்டனவென்பது மேற்பார்வையில் சிறிதும் தெரியாதபடி அமைத்திருப்பதும் ஒரு ஆச்சரியம்! இதுவே இந்நூலுக்கு ஒவ்வொரு சூர்ணையிலும் அஸாதாரணமான சிறப்பு என்றுணர்க. இதற்குமேல் "எம்பெருமானுகிற விளக்கைக் கண்டு" என்று ஆசிரியர் சொல்ல நினைத்த விஷயத்தையும் ஆழ்வார் பாசு த்தாலேயே சொல்லுமிடத்து, எம்பெருமானை விளக்காகக் கூறுவது பெரியாழ்வார், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் ஆகிய மூவருடைய பாசுரங்களினுலும் ஸித்திக்கின்றதென்று காட்டவேண்டி "மேலிருந்த நந்தா வேத விளக்கை" என்று சொல்தொடர் அமைத்தது வெகு அற்புதம். *வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கு* என்றவர் பெரியாழ்வார். *நந்தாவிளக்கே* என்றவர் திருமங்கையாழ்வார். *மிக்கஞான மூர்த்தியாய வேதவிளக்கினை-கண்டு* என்றவர் நம்மாழ்வார். இம்மூன்று மேற்கோள்களும் விளங்குமாறு "மேலிருந்த நந்தா வேதவிளக்கைக் கண்டு" என்று தொடுத்தது மற்றொருவர் மதிக்கும் நிலமன்று. மேலிருந்த விளக்கை யென்றோ, நந்தாவிளக்கை யென்றோ வேதவிளக்கையென்றோ ஏதேனுமொருவிதமாகப் பேசியிருந்தாலும் போதும்; ஆனால், மூன்று மேற்கோள்கள் காட்டின வழகு அப்போது விளங்காதன்றோ?' இதிலும் பல மேற்கோள்கள் காட்டப்பட்டனவென்பது தெரியாதபடியே சொல்தொடை அமைந்துள்ளது.

இதற்குமேல் நன்றுதீதுகளைப் பகுத்துணருகைக்காக வென்று தாம் சொல்ல நினைத்த விஷயத்தையும் இரண்டு மேற்கோள்களால் கூறவிரும்பிய ஆசிரியர் "நல்லதும் தீயதும் விவேகிக்கைக்கு" என்று சொல்தொடர் அமைத்தார். இதில் *இவையன்றே நல்ல இவையன்றே தீய* என்ற நம்மாழ்வார் பாசுரமும், *ஸதஸதீச விவேக்தும்* என்ற பட்டர் ச்லோகமும் கையாளப்பட்டிருப்பது காண்க. நல்லதும் தீயதுமறிகைக்கு என்றோ, ஸதஸத்துக்களை விவேகிக்கைக்கு என்றோ மூலமியற்றியிருக்கலாம்: ஆனால், அப்போது ஒரு ப்ரமாண வசனமே மேற்கொண்டதாகும். அவ்வளவில் த்ருப்தியடைபவரல்லரே இவ்வாசிரியர். இதற்குமேல் "அகாரமாகிற விளக்கில்" என்று சொல்ல நினைத்த ஆசிரியர். அகாரத்தை விளக்காகக் கூறுவது திருமங்கை யாழ்வாருடையவும் திருமழிசையாழ்வாருடையவும் பாசுரங்களினுல் ஸித்திக்கின்ற தென்று காட்டவேண்டி மறையாய் விரிந்த துளக்கமில் விளக்கில் கொளுத்தின என்று சொல்தொடர் அமைத்தார். *மிக்காளை மறையாய்விரிந்த விளக்கை* என்றருளிச்செய்தவர் திருமங்கையாழ்வார்; *தோன்று சோதி மூன்றுமாய்த் துளக்கமில் விளக்க மாய்* என்றருளிச்செய்தவர் திருமழிசையாழ்வார்; இவ்விரண்டு மேற்கோள்களும் உணரலாம்படி "மறையாய்விரிந்த துளக்கமில் விளக்கில் கொளுத்தின" என்று மூலமமைத்தது மற்றொருவருடைய சிந்தைக்கும் கோசரமன்று, மறையாய்விரிந்த விளக்கிலென்றோ துளக்கமில் விளக்கிலென்றோ இயற்றியிருந்தாலும் குறையில்லை. ஆனால். அப்போது இச்சுவை காண முடியாததாகும். இந்த முதல் சூர்ணையில், ஞானத்தை ஒரு விளக்காகவும், எம்பெருமானை ஒரு விளக்காகவும், அகாரத்தை ஒரு விளக்காகவும் பேசிவந்தபடிக்கிணங்க, சாஸ்த்ரத்தையும் ஒரு விளக்காகப் பேசவேண்டி ப்ரதீபமானகலைகளை யென்று மூல மியற்றியுள்ளார். இதிலுள்ள 'ப்ரதீபமான' என்கிற விசேஷணமானது பட்டர் ஸ்ரீஸூக்தியிலிருந்துகொள்ளப்பட்டது (*மாநம் ப்ரதீபமிவ காருணிகோ ததாதி* என்றாரே அவர்.) அதற்குமேல் கலைகளை என்கிற விசேஷ்ய

மானது *கலைகளும் வேதமும் நீதிநூலும்* *பன்னுகலை நால்வேதம்* என்ற திருமங்கை யாழ்வார் பாசுரங்களிலிருந்து கொண்டு கூறப்பட்டது.:' இந்த சூர்ணையில், ஆரம்பத்தில் திருவுள்ளம் பற்றின *காருணிகோததராதி என்ற பட்டர் ஸ்ரீஸூக்திக்குச் சேர நீர்மையினு லருள் செய்தா னென்று திருமங்கையாழ்வார் பாசுரத்தினுல் முடித்தது மிக ரஸிக்கத்தக்கது.

## அந்வயத்தில் விசேஷம் நிருபித்தல்

7. இன்னமும் பலவிசேஷங்கள், இதிலே உய்த்துணரவேண்டியவை மருமங்களாகவுள்ளன: அவற்றையும் உணர்த்துகிறோம். "கண்ணன் பின்மாலையெழுந்து கோவிலை வலம்வந்து குளஞ் சென்று நீராடித் தாமரைப் பூப் பறித்து வர எண்ணங்கொண்டு இரவில் படுத்துக்கொண்டான்" என்று ஒருவர் சொன்னுல், இந்த மஹாவாக்கியத்தில் காணப்படுகிற எழுந்து, வலம்வந்து, சென்று, நீராடி, பறித்து என்கிற வினையெச்சங்கள் இறந்தகால வினையெச்சங்களாக இருந் தாலும் எதிர்காலப் பொருள்படுமேயன்றி இறந்தகாலப் பொருள் படுவதில்லை யென்பது தெளிவு; பின்மாலை யெழுந்திருக்கவும் கோவிலை வலம் வரவும், குளம் செல்லவும் அங்கு தாமரைப்பூப் பறிக்கவும் திரும்பி வரவும் எண்ணங்கொண்டு படுத்துக்கொண்டதாகவன்றோ சொல்லவேண்டியுள்ளது. இவ்விதமாகப் பொருள்கொள்ள வேண்டிய பிரமேயம் இத்திவ்விய நூலில் மிகவுண்டு. இதையும் இந்த முதல் சூர்ணையிலேயே காணலாம். இதில் விளக்கேற்றி, இருள் நீங்கி, விளக்கைக்கண்டு என்கிற இறந்தகால வினையெச்சங்கள் எதிர்காலப் பொருளிலேயே பிரயோகிக்கப்பட்டன. விவேகிக்கைக்கு என்று மேலுள்ள ஸ்ரீஸூக்திக்குச் சேருமிது. 'விளக்கேற்றுகைக்காகவும், அதனுல் இருள் நீங்கப் பெறுதற்காகவும், பின் எம்பெரு மானுகிற விளக்கைக் காண்கைக்காகவும் நல்லதும் தீயதும் விவேகிக்கைக்காகவும் கலைகளை யருள் செய்தானென்பதாக இங்கு விவக்ஷிதமென்று உணரவேணும். மற்றொரு விஷயமும் குறிக்கொள்க. அதாவது, திவ்விய ப்ரபந்தப் பாசுரங்களுக்குப் பெரியவாச்சான்பிள்ளை முதலானுர் அருளிச்செய்த வியாக்யானங்களில் காணுத சில அர்த்த விசேஷங்களும் இவ்வாசிரியர் திருவுள்ளம் பற்றுவதுண்டு. நிர்வாஹயோஜநா பேதங்களென்கிற முறையிலே இது தீதற்றதே. இப்படி இவ்வாசிரியர் கொண்டதோர் அர்த்த விசேஷமும் இந்த முதல் சூர்ணையிலேயே காணக் கிடக்கின்றது. *மறையாய் விரிந்த விளக்கை* என்கிற திருமங்கையாழ்வார் பாசுரத்திற்குப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில் காணுத பொருள் இவர்கொண்டது. எம்பெருமான் றன்னையே ஸாக்ஷாத்தீபமாக மறையாய் விரிந்த விளக்கென்று ஆழ்வார் கூறினதாகப் பெரிய வாச்சான் பிள்ளையின் வியாக்கியானம் காட்டுகின்றது. இவ்வாசிரியரோ வென்னில் ஸகல வாக்குக்களுக்கும் வித்தான அகாரத்தை மறையாய் விரிந்த விளக்கென்று சொன்னதாகக் கொண்டு அந்த அகாரத்திற்கு எம்பெருமான் பொருளாயிருப்பவனென்கிற காரணத்தினுல் [அந்த ஸாமாநாதிகரண்ய நிதானத்தினுல்] ஆழ்வார் பாசுரத்தில் எம்பெருமான் பொருள்படுகிறு னென்று திருவுள்ளம்பற்றி இந்த சூர்ணையில் அகாரபரமாகவே அந்தப்பாசுரத்தை மேற்கொண் டருளினுர். இப்படிப்பட்ட நிர்வாஹபேதம் இந்நூலில் ஐந்தாறிடங்களில் வருவதுண்டு. மேலே "பண்ணுர் பாடல் பண்புரை யிசைகொள் வேதம்போலே" (50) என்ற சூர்ணையின் வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்தியுங்காண்க.

* மற்றுமொரு ப்ரம ஆச்சரியமான விஷயமும் இந்த திவ்யக்ரந்த அமைப்பில் பொலிகின் றுள்ளது; அதாவது, பல்பல பாசுரங்களை இவ்வாசிரியர் மேற்கோள்களாக எடுத்தாளச்செய்தே யும் அவை இவருடைய ஸொந்த வாக்யம்போல் வரிசையாக அந்வயம் பெற்று விளங்கா

நிற்கும். மற்றை நூல்களில் மேற்கோள்களைக் காட்டினால் "என்கிறபடியே" என்றும், "என்று" என்றும் இடையிடையே காணப்படும். அவை ப்ரமாணவசனங்களென்று தனிப் பட்டு நிற்குமேயொழிய நூலாசிரியருடைய வாக்ய சைலியாகவே பொருந்திப் பொருள் படமாட்டா. ஸ்ரீவசநபூஷணம், தத்வத்ரயம், முமுக்ஷுப்படி, ரஹஸ்யத்ரயஸாரம் முதலிய ஸகல க்ரந்தங்களும் அவ்வகையிலேயே அமைந்தன. இந்நூலில் அப்படி மேற்கோளெடுத்துக் காட்டுவதாகத் தமே கூறுகிற விடங்கள் மிகச்சில; 'மறந்தேனறியகிலாதே உணர்விலேனேனி லேனயர்த் தென்றும்" 'உடன்ஞாலம் மின்னிடை மல்லிகை......வாயுந்தீர்ப்பா ரென்னு மவற்றிலே தோன்றும்" என்பவை முதலிய சில சூர்ணைகளில் மாத்திரமே மேற்கோளான ப்ரமாணவசனங்கள் தமது வார்த்தையாக அமைந்து பொருள்படாமல் "என்று" "என்றவை" "என்கிற" இத்யாதி பதங்களைச் சேர்த்துத் தனியந்வயமாகக் காட்டப்பட்டிருக்கும். பெரும் பாலும் அப்படியல்லாமல் 'ப்ரமாணவசனங்களான மேற்கோளிவை' என்றே பிறரால் தெரிந்து கொள்ள முடியாமலும், அப்படி எடுத்தாளப்படுகிற அவையும் வரிசையாய் மிகப்பொருத்தமான அந்வயம் பெறும்படியாகவும் தொடுக்கப்பெறுவது இவ்வாசிரியரொருவர்க்கே சிறப்பாகவும் அற்புதமாகவும் அமைந்த நடை. இந்நூலில் இந்த நடையொன்றே மாஞானிகளின் நெஞ்சை யுளுக்கக் கூடியது. இவ்விஷயத்தையும் மேலே நாமெடுத்து விவரித்த முதல் சூர்ணையிலேயே காணலாம். "உணர்வென்னும் சுடர்விளக்கேற்றி" பிறங்கிருள் நீங்கி' 'மேலிருந்த ந்தா வேத விளக்கை 'மறையாய் விரிந்த துளக்கமில் விளக்கில்' என்னுமிந்த வாக்கியங்களில் ஒவ்வொன்றி லும் பல மேற்கோள்கள் புகுந்திருக்கவும் "என்கிறபடியே" என்னவேண்டிய அவகாசமே யில்லாமல் இவருடைய ஸொந்த வாக்குபோலே ஒன்றோடொன்று இணங்கி வரிசையாக ஒரு நீராய்ப் பொருள் பட்டிருக்குமழகு ஒவ்வோரிடத்திலும் ஆழ்ந்து ஆராய்ந்து உணரவேண்டிய மஹத்தான அதிசயம். பலபல மேற்கோள்களையும் தமது வார்த்தையாகவே ஆக்கி அடைவே அந்வயம் பெறத் தொடுப்பதென்பது தனிப்பட்டதொரு சக்தி விசேஷமன்றோ. இவ்விஷயத்தில் இன்னமுங்கேண்மின்.

*இரண்டாம் ப்ரகரணத்தில் ச்ரமணீ விதுர ரிஷிபத்நிகளைப் பூதராக்கின புண்டரீகாக்ஷன் நெடுநோக்கு' என்பது ஒரு ஸ்ரீஸூக்தி. 'சபரியையும் விதுரரையும் ரிஷிபத்நியையும் பரிசுத்தப்படுத்தின புண்டரீகாக்ஷனுடைய திவ்யகடாக்ஷமானது' என்பது இந்த வாக்கியத்தின் பொருள். இங்கு 'பூதராக்கின புண்டரீகாக்ஷன் நெடுநோக்கு' என்கிற சொல்தொடர் மிக அற்புதமானது. முன்னேயெடுத்த மூவரையும் எம்பெருமான் பரிசுத்தப் படுத்தி யருளினதை அந்தந்த ஸ்தலங்களிலுள்ள ப்ரமாணங்களைக் கொண்டே காட்டுவதாக வன்றோ இந்த சொல்தொடர் அவதரித்திருக்கின்றது. (1) *சக்ஷுஷா தவ ஸௌம்யேந பூதாஸ்மி ரகுநந்தந!* என்கிற சபரியின் வார்த்தையை நினைப்பூட்டுகிறது 'பூதராக்கின' என்கிற சொல். (2) விதுரர்திருமாளிகையிலே அமுதுசெய்தருளின கண்ணபிரானை நோக்கித் துரியோதனன் பீஷ்மாசார்யரையும் த்ரோணாசார்யரையும் என்னையு முபேக்ஷித்து (விதுர னென்னும்) சூத்ரனுடைய அன்னத்தை எவ்வாறு புஜித்தாய்? என்று க்ஷேபிக்கும்போது *பீஷ்ம த்ரோணாவதிக்ரம்ய மாஞ்சைவ மதுஸூதந, கிமர்த்திம் புண்டரீகாக்ஷ! புக்தம் வ்ருஷல போஜநம்* என்ற ச்லோகத்தில் 'புண்டரீகாக்ஷ! என்று ஸம்போதித்தான்; வையவந்த இந்த இடத்தில் இப்படிப்பட்ட ஸம்போதநம் தகவேதகாது. ஆனாலும் தைவிகமாகவே அவன் வாயில் புண்டரீகாக்ஷ! என்கிற ஸம்போதனம் வெளிவந்தது; விதுரன் சூத்ரயோநியில் பிறந்தவனாயினும் உன்னுடைய தாமரை போன்ற திருக்கண்பட்டதனால் சபரியைப்போலவே

அவனும் பரிசுத்திபெற்றனன் என்பதாகக் காட்டுவதாம் இந்த புண்டரீகாக்ஷ! என்பது. ஆகவே இதுவும் திருக்கண்ணோக்கத்தாலே பரிசுத்தப்படுத்துகையென்கிற ப்ரக்ருத உத்தேசிய விஷயத்தில் விதுரரைப் பரிசுத்தராக்கினதற்கு ப்ரமாண வசனம் காட்டினபடியாயிற்று. (2) இனி மூன்றுவதாகவுள்ள நெடுநோக்கு என்கிற சொல் *வேர்த்துப் பசித்து வயிறசைந்து வேண்டடிசிலுண்ணும் போது, ஈதென்று பார்த்திருந்து நெடுநோக்குக் கொள்ளும் பத்தவிலோசனத்து* என்கிற ஆண்டாள் பாசுரத்தை நினைப்பூட்டும் முகத்தாலே அந்த விஷயத்திற்கு ப்ரமாணம் காட்டினபடியாகிறது. ஆக இங்ஙனே ப்ரக்ருத விவக்ஷிதத்திற்கு ப்ரமாணம் காட்டுவதாகப் பிறர் தெரிந்துகொள்ள முடியாதபடிக்கு ப்ரமாணங்களைக் காட்டும் முறையிலே உக்திவிந்யாஸம் செய்வது ஆசார்ய ஹ்ருதயகாரருக்கு அஸாதாரணமான ஸாமர்த்தியம். இப்படி அமைந்த க்ரந்தம் வேறு கிடையாதென்பது புநருக்தம்.

8. இந்நூலில் 'இவற்றுக்கு மூலம் இருவல்லருள் நல்வினைகள்' என்பது எட்டாவது சூர்ணை. இதன் பொருளென்ன வென்றால், கீழ்ச் சூர்ணையில் சொல்லப்பட்ட ஜன்மத்திற்கு மூலம் ப்ரபலங்களான புண்ய பாபங்கள்; (கீழ்ச் சூர்ணையில் சொல்லப்பட்ட) கடாக்ஷத்திற்கு மூலம் ஸ்வாபாவிகக்ருபையாகிற ஸுக்ருதம். என்பது பொருள். இப்பொருளுக்கு வாசகமாக மூலத்திலுள்ள ஸ்ரீஸூக்தியோ வென்னில், 'இருவல்லருள் நல்வினைகள்' என்பது *சார்ந்த இருவல்வினைகளும் சரித்து* என்கிற பாசுரத்தையும், *தொல்லருள் நல்வினையால்* என்கிற பாசுரத்தையுங் கொண்டு இந்த ஸ்ரீஸூக்தி வெகு அற்புதமாக அருளிச் செய்யப்பட்டது. ஆசார்யஹ்ருதயகாரருடைய ஸாமர்த்யங்களில் விலக்ஷண ஸாமர்த்தியமிது; விசேஷணம் பேதப்படாமல் விசேஷ்யங்கள் மட்டும் பேதப்பட்டிருக்கும் ப்ரமாணங்களைத் தாம் சேர்க்கும் போது, விசேஷண பதத்தை ஒரு தடவை மட்டும் சொல்லிவிடுவர். (இதற்கு உதாஹரணம்.) *ஸர்வலோக சரண்யாய* என்கிற விபீஷண வசனத்தையும், *அபயம் ஸர்வ பூதேப்ய:* என்ற பெருமாள் வசனத்தையும் ஒரே வார்த்தையாகத் திருவுள்ளம்பற்றி "ஸர்வலோக பூதேப்ய:" என்றருளிச் செய்திருக்கிறார். மேலே காட்டின இரண்டு வசனங்களிலும் விசேஷ்ய பதங்கள் பேதப்பட்டிருந்தாலும் (ஸர்வ என்கிற) விசேஷணபதம் ஒன்றே யாதலால் அதை முன்னே ஒரு முறை ப்ரயோகித்து, வெவ்வேறான விசேஷ்யங்களை யொன்று சேர்த்து (ஸர்வலோகபூதேப்ய:) என்றவிது வேறொருவருடைய மதிக்கு நிலமன்று. விசேஷணங்கள் வேறுபட்டு விசேஷ்யம் மட்டும் வேறுபடாமலிருக்கும் ப்ரமாண வசனங்களைத் தாம்சேர்க்கும்போது, வெவ்வேறான விசேஷணபதங்களை அப்படியே காட்டி, வேறுபடாத விசேஷ்யத்தை மட்டும் ஒருமுறை சொல்லுவர்; இதற்கு உதாஹரணம் மேலே காட்டின (இருவல்லருள் நல்வினைகள்) என்பது. *சார்ந்த இருவல்வினை* என்றவிடத்தும்* தொல்லருள் நல்வினை* என்றவிடத்தும் வினையென்பதே விசேஷ்யமாதலால் அதை இருமுறை ப்ரயோகித்திலர். ஒரு பாசுரத்தில் (இருவல்) என்பது விசேஷணம்; மற்றொரு பாசுரத்தில் (அருள்நல்) என்பது விசேஷணம். இந்த வெவ்வேறுபட்ட விசேஷணங்களை ஒன்றுசேர்த்து (இருவல், அருள்நல்) என்றாக்கி விசேஷ்யமான வினையைக் கூட்டி 'இருவல்லருள் நல்வினைகள்' என்று யோஜித்திருப்பதானது அஸாதாரண சக்தி விசேஷ நிபந்தனம்; இவ்விடத்து வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகள் விரிவாக விவரணம் காட்டியருளாமல் 'இருவல்லருள் நல்வினைகள் என்றது இருவல்வினையும் அருள்நல்வினையும் என்றபடி' என்று இவ்வளவே காட்டியருளினார். நெடுநாளைக்கு முன்னே தெலுங்கு லிபியிலும் தமிழ் லிபியிலும் ஆசார்ய ஹ்ருதய வியாக்யானத்தைப் பதிப்பித்தவர்கள் இங்கு 'இருள் வல்வினையும் அருள் நல்வினையுமென்றபடி' என்று இல்லாததொரு ளகரத்தைச் சேர்த்துத் தவறாக அச்சிட்டு விட்டார்கள். இத்தகைய அச்சுத் தவறுகள் அனேகம்.

இதுவரை ஸ்ரீஸூக்தி சித்திரம் அநுபவித்தோம்;
இனி அர்த்தசித்திரமநுபவிப்போம்.

## "சாஸ்த்ரதாத்பர்யங்களுக்கு விசிஷ்ட நிஷ்க்ருஷ்ட வேஷங்கள் விஷயம்"

9 "முனிவரையிடுக்கியும் முந்நீர்வண்ணனையும் வெளியிட்ட சாஸ்த்ரதாத்பர்யங்களுக்கு விசிஷ்ட நிஷ்க்ருஷ்ட வேஷங்கள் விஷயம்" என்பது பதினேழாவது சூர்ணிகை. இதில் [சாஸ்த்ராதாத்பர்யங்களுக்கு] என்பதை 'சாஸ்த்ரங்களின் தாத்பர்யங்களுக்கு' என்று பொருள்கொண்டதாகவே பலர் மயங்குவர். இங்கு த்வந்த்வஸமாஸமேயொழிய தத்புருஷஸமாஸமன்று. சாஸ்த்ரங்களென்ன, தாத்பர்யமென்ன இவற்றுக்கு என்று பொருள். முனிவரையிடுக்கிவெளியிட்டது சாஸ்த்ரம்; முந்நீர்வண்ணனைப் வெளியிட்டது தாத்பர்யம். முனிவரையிடுக்கி வெளியிடுகையாவது — வியாஸர் முதலிய மஹரிஷிகளுக்கு அந்தர்யாமியாயிருந்து வெளியிடுகை. அப்படி வெளியிட்டவை சாஸ்த்ரங்கள். முந்நீர்வண்ணனைப் வெளியிட்டது (சாஸ்த்ரங்களில்) தாத்பர்யமான திருமந்த்ரம். பதரிகாச்ரமத்தில் நாராயணன் திருமந்த்ரத்தை வெளியிட்டபடியால், திருமங்கையாழ்வார் பதரிகாச்ரமத் திருமொழியில் *வருந்திரைமணிநீர்க் கங்கையின் கரைமேல் வதரியாச்சிரமத்துள்ளானைக், கருங்கடல்முந்நீர்வண்ணனையெண்ணி* என்கிற நிகமனப்பாசுரத்தில் அப்பெருமானை *முந்நீர்வண்ணனாக வ்யபதேசித்ததையுட்கொண்டு "முந்நீர்வண்ணனைப் வெளியிட்டது தாத்பர்யம்" என்றருளிச்செய்தாரிங்கு. திருமந்த்ரத்தை தாத்பர்ய சப்தத்தால் குறித்தது — ஸாரம் என்கிற பொருளை விவக்ஷித்து, இவ்வாசிரியர் ஸாரம் என்கிற சொல்லாலேயே திருமந்த்ரத்தை இந்நூலில் வியபதேசித்து வருகிறார். (சூர்ணை 19ல்) 'சாஸ்த்ரிகள்' என்றதற்குப் பிரதியாக 'ஸாரஜ்ஞர்' என்றிட்டிருப்பதை நோக்குக. ஸகல சாஸ்த்ரங்களையும் ஒருதட்டாக வைத்து திருமந்த்ரத்தை ஒருதட்டாகவைத்து சாஸ்த்ரங்களுக்கு விசிஷ்டவேஷம் விஷயமென்றும், திருமந்த்ரத்திற்கு நிஷ்க்ருஷ்டவேஷம் விஷயமென்றும் ஸாதிக்கிறபடி.

10. விசிஷ்டவேஷமாவது என்ன? நிஷ்க்ருஷ்ட வேஷமாவது என்ன? என்று தெரிந்துகொள்ளவேணும். தேஹவிசிஷ்டவேஷத்தை விசிஷ்டவேஷமென்கிறது. சுத்தாத்மஸ்வரூபத்தை நிஷ்க்ருஷ்டவேஷமென்கிறது. சாஸ்த்ரங்கள் வர்ணாச்ரமதர்மங்களைப்பற்றிச் சொல்லத் தோன்றியவையென்பதை ஸ்பஷ்டமாக அறியலாம். இது ப்ராஹ்மணர்களை நோக்கிச் சொல்லுகிறது, இது க்ஷத்ரியர்களை நோக்கிச் சொல்லுகிறது; இது ப்ரம்சாரிகளை நோக்கிச் சொல்லுகிறது, இது ஸம்ந்யாஸிகளைப்பற்றிச் சொல்லுகிறது—என்னும்படியன்றோ சாஸ்த்ரங்களிருப்பது. ஆகவே அவற்றுக்கு விசிஷ்டவேஷம் விஷயம் என்கிறது. திருமந்த்ரமானது அங்ஙனன்றிக்கே சுத்தமான ஆத்மஸ்வரூபத்தைப்பற்றியே சொல்லுகிறது. ஸகல ஜாதியர்களிடத்துமுள்ள ஆத்மஸ்வரூபத்தைப்பற்றியே திருமந்த்ரம் சொல்லுவதால் அதற்கு நிஷ்க்ருஷ்டவேஷம் விஷயம் என்கிறது. முமுக்ஷுப்படி – த்வயப்ரகரணத்தில் (118), "எல்லாப்ரமாணங்களிலும் தேஹத்தாலே பேறென்கிறது; திருமந்த்ரத்தில் ஆத்மாவாலே பேறென்கிறது" என்று இவர் திருத்தமையனார் அருளிச்செய்தது இங்கு ஸ்மரிக்கத்தக்கது. ஆக, சாஸ்த்ரங்களுக்கு தேஹத்திலே நோக்கு, திருமந்த்ரத்திற்கு ஆத்மஸ்வரூபத்திலே நோக்கு என்றதாயிற்று.

## "ஜ்ஞான சதுர்த்திகளின்மேலேயிறே ஆனந்தவ்ருஷ்டிகளுக்கு உதயம்."

11. இருபத்திரண்டாவது சூர்ணை இது. இதன் பொருளும் கருத்தும் உணர்வதும் தரிப்பதும் சிரமமென்று சொல்லப்படும். விசதவாக்சிகாமணிகள் வியாக்கியானம் செய்தருளின பின்பு உணர்வதில் சிரமமென்பதுண்டோ? தரிப்பது சிரமமேயென்னலாம். உணர்த்துகிறே

ஜுணர்மின். கீழ்ச்சூர்ணை "சேஷத்வபோக்த்ருத்வங்கள் போலன்றே பாரதந்தர்யபோக்யதைகள்" என்பது. இதனால் என்ன தெரிவிக்கப்பட்டதென்னில், சேஷத்வத்திற்காட்டில் பாரதந்த்ர்யம் சிறந்ததென்றும் போக்த்ருத்வத்திற்காட்டில் போக்யதை சிறந்ததென்றும் தெரிவிக்கப்படுகிறது. சேஷத்வமும் பாரதந்த்ர்யமும் ஒன்றுதானே, சப்தபேதமேயொழிய அர்த்தபேதமில்லையேயென்று பலர் நினைத்திருப்பர்கள். சேதனனான ஜீவாத்மா போக்தாவாகவும், நிலாத் தென்றல் சந்தனம் புஷ்பம் முதலான அசேதநப்பொருள்கள் போக்யங்களாகவும் வ்யவஸ்திதமாகத்தானேயிருக்கிறது; போக்தாவான சேதநனிற்காட்டிலும் போக்யங்களான அசேதநங்களுக்கு என்ன சிறப்பு இருக்கிறது! என்றும் பலர் கலங்கியிருப்பர்கள். இவ்விருவகுப்பினரும் தெளியுமாறு சொல்லுகிறதிங்கு. சேஷத்வத்திற்கும் பாரதந்த்ர்யத்திற்குமுள்ளவாசியை முன்னம் தெரிந்துகொள்ளவேண்டும். "கட்டிப் பொன்போலே சேஷத்வம், பணிப்பொன்போலே பாரதந்த்ர்யம்" என்பது ஸம்ப்ரதாய ஸூத்ரமொன்று. கட்டிப் பொன்னாவது மோதிரமாகவோ குண்டலமாகவோ அணிந்துகொள்ள முடியாதபடிக் கட்டியாயிருக்கிற பொன், பணிப்பொன்னாவது—ஓர் ஆபரணமாகச் செய்யப்பட்டு உபயோகப்பட்டு வருகிற பொன். இதைச் சாஸ்த்ரரீதியில் சொல்லுவதானால் சேஷத்வமாவது ஸ்வரூபயோக்யதாமாத்ரம்; பாரதந்த்ர்யமாவது பலோபஹிதம் என்னவேணும். ஸ்வரூபயோக்யதையோடு நிற்காமல் உபயோகப்பட்டு வருவதையும் சேஷத்வமென்று சொல்லுவதுண்டானாலும் அது கௌணமேயொழிய முக்யமன்று. தேஹமானது ஆத்மாவிற்காட்டிலும் வேறுபட்டிருக்கச்செய்தேயும் ஆத்மசப்தத்தாலே தேஹத்தையும் சொல்லுவதுபோல் இதைக்கொள்க. *ஆத்மா ஜீவே த்ருதௌ தேஹே* என்று நிகண்டுவுள்ளதன்றே. ஆக சேஷத்வத்திற்காட்டில் பாரதந்த்ர்யம் வேறுதான். இளையபெருமாள்படி சேஷத்வம்; பரதாழ்வான்படி பாரதந்த்ர்யம்—என்று ஆசார்யர்கள் காட்டுவர்கள். பெருமாள் இளையபெருமாளை நீ என்னோடு காட்டுக்கு வரவேண்டாமென்று சொல்லியும், இடையில் நீ ஊருக்குத் திரும்பிச்செல் என்று சொல்லியும் கேட்கவில்லை. இங்கு சேஷத்வத்தில் குறையில்லை, ஆனால் பாரதந்த்ர்யமில்லை. பரதாழ்வான் பெருமாள் சொன்னபடி கேட்டவனாதலால் அவனுடைய நிலை பாரதந்த்ர்யமென்னப்படுகிறது. கட்டிப் பொன்னைக்காட்டிலும் பணிப்பொன் எப்படி உயர்ந்ததோ, அப்படி சேஷத்வத்திற்காட்டிலும் பாரதந்த்ர்யம் உயர்ந்ததாயிற்று.

12. இனி, போக்த்ருத்வம், போக்யதை என்ற இரண்டையெடுத்துக்கொள்வோம். முமுக்ஷுப்படியில் "போகதசையில் ஈச்வரனழிக்கும்போது நோக்கவேணுமென்று அழியாதொழிகை" என்ற சூர்ணையின் பொருளை நன்குணர்ந்தவர்களுக்கும், (திருப்பாவையில்) *உனக்கே நாமாட்செய்வோம்* என்ற பிறகும் *மற்றைநங் காமங்கள் மாற்று* என்றதன் கருத்தையறிந்தவர்கட்கும், *மருந்தே நங்கள் போகமகிழ்ச்சிக்கென்று பெருந்தேவர் குழாங்கள் பிதற்றும்பிரான்* என்ற திருவாய்மொழிப் பாசுரத்தின் உட்பொருளையுணர்ந்தவர்களுக்கும் போக்த்ருத்வத்திற்காட்டிலும் போக்யதை சிறந்ததென்பதைப்பற்றி நாம் விவரிக்கத் தேவையில்லை. ஆளவந்தார் *கதாஹம் ஐகாந்திக நித்யகிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி ஸநாதஜீவித:* என்றருளிச்செய்ததில் 'அஹம் கதா ப்ரஹர்ஷிஷ்யாமி' என்னாமல் 'அஹம் கதா ப்ரஹர்ஷயிஷ்யாமி' என்றாரே, இந்த ப்ரஹர்ஷயிஷ்யாமியிலே கீழே விவரித்ததெல்லாம் அடங்கும். அத்தலையின் உகப்புக்கு நாம் உறுப்பாயிருக்கவேண்டுமத்தனை. நிலாத் தென்றல் முதலானவை எப்படி போக்தாவன்றிக்கே போக்யமாகவேயிருக்கிறதோ அப்படியிருக்கவேணுமென்றவாறு. ஆக, சேஷத்வமானது ஸ்வரூபமென்றும், பாரதந்த்ர்யமானது ஸ்வரூபயாதாத்ம்யமென்றும் சொல்லப்படும். இப்படியே போக்த்ருத்வமானது ஸ்வரூபமென்றும், போக்யதையானது ஸ்வரூபயாதாத்ம்யமென்றும் சொல்லப்படும். இரண்டிலும் முந்தினது வடிக்கட்டாத நிலையென்றும், பிந்தினது வடிக்

கட்டின நிலையென்றும் கொள்க. முந்தினது சாஸ்த்ரங்களால் தேறுவது, பிந்தினது திருமந்த்ரத்தால் தேறுவது என்றுங் கொள்க. அதாவது, பாரதந்த்ர்யமும் போக்யதையும் திருமந்த்ரத்தில் தான் உய்த்துணரத்தக்கவை என்றபடி. இவ்வளவையும் உள்ளத்தில் நன்கு பதிய வைத்துக் கொண்டு "ஜ்ஞான சதுர்த்திகளின் மேலேயிறே ஆனந்தஷஷ்டிகளுக்கு உதயம்" என்கிற சூர்ணையின் கருத்தையுணரப் புகுந்தால் எளிதாக உணரலாகும்.

## ஜ்ஞானசதுர்த்திகளும் ஆனந்தஷஷ்டிகளும்

13. ஜ்ஞானத்தின் மேலே ஆனந்தத்துக்கு உதயம்; சதுர்த்தியின்மேலே ஷஷ்டிக்கு உதயம் என்று யோஜிப்பது. ஜ்ஞானத்தின்மேலே ஆனந்தத்துக்கு உதயம் என்றதை விவரிக்கிறேன். திருமந்த்ரத்துக்கு உள்ளீடான ப்ரணவத்தில் மூன்றும் அக்ஷரமான மகாரம் [தனக்கு ப்ரக்ருதியான தாதுவிலிருந்து] ஜ்ஞானத்தைச்சொல்லு மதாகையாலே அந்த மகாரமே இங்கு ஜ்ஞான சப்தத்தாலே விவக்ஷிதம். ஆத்மா ஜ்ஞாதாவென்று தேறும். ஜ்ஞாதா என்றபோதே கர்த்தா என்றும் தேறும். கர்த்தா என்றபோதே போக்தா என்றும் தேறும். ஆக சேதநன் போக்தா என்று முடிந்தது. இது சுவறு என்று மேலே காட்டப்படுகிறது; எங்ஙனேயென்னில்; "மகாரத்தை விவரிக்கிறது சதுர்த்தி" என்கிற முமுக்ஷுப்படி ஸூத்திரப்படி மகாரத்திற்கு விவரணமான வ்யக்தசதுர்த்தியிலே கைங்கர்யபோகம் சொல்லப்பட்டு அதனுல் (ஜீவனுகிய) தனக்கு போக்த்ருத்வசிபந்தனமான ஆனந்த முண்டாவதாகத் தேறும். அஷ்டச்லோகியில் "மந்த்ரப்ரஹ்மணி மத்யமே நமஸா" என்கிறச்லோகத்தில் சிக்ஷிக்கப்படுகிறபடி அந்த சதுர்த்தியோடும் அந்வயிக்கிற நமஸ்ஸானது அந்த போக்த்ருத்வம் தனக்கன்று என்று கழிக்கிறதாகையாலே போக்த்ருத்வமானது விரோதியின் உதயத்தையும் தந்நிவ்ருத்தியையும் ஸஹித்திருக்குமதாய்க் கொண்டு, நின்றநிலையிலே அபக்ருஷ்ட மென்று முடிந்தது வியாகரணத்தில் அபவாத சாஸ்த்ரமென்று சிலபலஸூத்திரங்களுண்டு. அந்த அபவாத சாஸ்த்ரத்திற்கு இலக்கான விதிசாஸ்த்ரமானது துர்ப்பலம் எனப்படும். அந்த ந்யாயமே இங்குக் கொள்ளவடுக்கும். ப்ரணவத்தில் முதலில் மகாரத்திலே போக்த்ருத்வம் தோன்றி அது மேலே (நமஸ்ஸால்) அடிபட்டொழிந்தபடியால் அது துர்ப்பலமாயிற்றென்கை.

### *"சதுர்த்தியின் மேலே ஷஷ்டிக்குஉதயம்"*

14. 'ஜ்ஞானத்தின்மேல் ஆனந்தத்திற்கு உதயம்' என்றது கீழ்விவரிக்கப்பட்ட கணக்கிலேயே 'சதுர்த்தியின்மேல் ஷஷ்டிக்கு உதயம்' என்றதும் விவரிக்கப்பட்டதாகும். திருமந்த்ரத்தில் இரண்டு சதுர்த்தியுண்டு. (ப்ரணவத்தில்) அகாரத்தின்மேலே ஏறிக்கழிந்ததாகச் சொல்லப்படுகிற (லுப்த) சதுர்த்தியொன்று. நாராயணபதத்தின் மேலுள்ள வ்யக்த சதுர்த்தியொன்று. கீழ்விவரணத்திலே ப்ரஸ்தாவிக்கபட்ட சதுர்த்தி வ்யக்த சதுர்த்தி. இப்போதைய விவரணத்தில் ப்ரஸ்தாவிக்கப்படுவதும் மூலஸ்தமுமான சதுர்த்தி—லுப்த சதுர்த்தி. இந்த லுப்த சதுர்த்தியிலே சேஷத்வம் சொல்லப்பட்டிருந்தும மேலே (ம:) என்கிற ஒரு ஷஷ்டி தோன்றி, அது ஸ்வரக்ஷணே ஸ்வப்ரவ்ருத்திக்குடலான ஸ்வாதந்த்ர்யத்தைக் கிளப்பி அது, தன்முன்னேயிருக்கிற நஞ்ஞாலே கழியுண்டு போயிற்றென்பதையுணரவேணும். ஆகவே (லுப்த) சதுர்த்தி சேஷத்வ ப்ரகாசகமாயிருந்ததேயாகிலும் மேலே விரோதியுண்டாகி அது கழிக்கப்படுமதாயிருக்கையாலே கீழதைவிட மேலது சிறந்ததென்றதாயிற்று. இத்தால் என்ன பலித்ததென்றால், அது கீழில் சூர்ணையில் சொல்லியாயிற்று. அதற்கு உபபாதகமாகவே இந்த சூர்ணை அவதரித்தது.

15. ***முக்கியமாக ஒன்று அவதேயம்.*** இவ்விடத்து மணவாள மாமுனிகளின் வியாக்கியானத்தில் ***"ஸ்வவிரோத்யுதய ஸஹங்கள்"*** என்கிற ஸ்ரீஸூக்தி மூன்றவிசை வருகிறது. மூன்றிடங்களிலும் ஸ்வவிரோதிஸ்தானத்திலே ஸ்வரூபவிரோதியென்றே பல பதிப்புகளிலும் பிழை ஏறிவிட்டது. அது ஸர்வாத்மநா அநந்விதம். ஸ்வவிரோத்யுதயஸஹ மென்றேயிருக்கவேண்டும். வர்த்தமாந ஐப்பசித்திருமூல வெளியீடான ஸ்ரீமத்வரவர முநீந்த்ரக்ரந்த மாலைப்பதிப்பில் திருத்தமான பாடமேயுள்ளது. ... ... ❖

## ***திவ்யப்ரபந்தவைபவஸம்க்ஷேபம்***

16. திவ்யப்ரபந்தவைபவத்தையும் ஆழ்வாருடைய வைபவத்தையும் அறிவதற்கு ஆசார்ய ஹ்ருதயத்தில் விஞ்சின நூல் கிடையாது. இவற்றை எளிதாகவுள்ளத்தில் தேக்கிக்கொள்ளப் பாங்காக ஸாரமாகவும் ஸம்க்ஷேபமாகவும் ஈண்டெழுதுகிறேன். [சூர்ணை 40 முதல் 46 அளவாக.] திவ்யப்ரபந்தத்தை த்ராவிடவேதமென்றும் தமிழ்மறையென்றும் வழங்கி வருகிறோம். இப்படி வழங்குவது ஆயிரம் வருஷங்களுக்கு முன்னமே தோன்றியது. ❖பக்தாம்ருதம்...... நமாம்யஹம் த்ராவிடவேதஸாகரம்❖ என்ற திருவாய்மொழித் தனியன் நிற்க. பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் ❖ஸ்வம் ஸம்ஸ்க்ருத த்ராவிட வேதஸூக்தை:❖ என்றருளிச் செய்தனர். வேத ராசி ஒன்றாயிருக்கச் செய்தேயும் அதுதன்னில் சாகாபேதத்தையிட்டு ருக்வேதம் யஜுர்வேதம் ஸாமவேதம் அதர்வணவேதம் என்று பிரிவு உண்டானாப்போலே, பாஷா பேதத்தையிட்டு ஸம்ஸ்க்ருதவேதம் த்ராவிடவேதம் என்கிற பிரிவும் ஸம்ப்ரதிபந்நம். இப்படி இதர பாஷைகளிலும் வழங்குகிற பக்தி நூல்களை ஆந்த்ரவேதம் ஹிந்தீவேதம் என்று வழங்கலாமல்லவோ என்னலாகாது. அகஸ்த்யமஹர்ஷிவ்யாக்ருத மென்கிற பெருமை த்ராவிடபாஷைக்கே அஸாதாரணமானது. இதர பாஷைகளுக்கு மஹர்ஷிப்ரஸூதத்வமென்கிற பெருமை கிடையாது திருவாய்மொழியில் ❖வடமொழிமறை வாணர்❖ என்கிறார்; தென்மொழிமறையில்லையாகில் 'வடமொழிமறை' யென்று விசேஷித்துச் சொல்லவேண்டியதில்லையன்றோ. ப்ரதிகோடியுள்ளவிடத்தன்றோ வ்யாவ்ருத்திக்காக விசேஷணமிடுவது. வடமொழியிலுள்ள நான்கு வேதங்களுக்கும் சிக்ஷாவ்யாகரணம் சந்தஸ் நிருக்தம் ஜ்யோதிஷம் கல்பம் என்று ஆறு அங்கங்களிருப்பதுபோல, திருவிருத்தம் திருவாசிரியம் பெரிய திருவந்தாதி திருவாய்மொழியாகிற நான்கு வேதங்களுக்கும் திருமங்கையாழ்வாருடைய பெரிய திருமொழி முதலான ஆறு திவ்ய ப்ரபந்தங்களும் அங்கமாயிருக்கும். ❖மாறன் பணிந்த தமிழ்மறைக்கு மங்கையர்கோன் ஆறங்கங் கூற❖ என்றார் மணவாள மாமுனிகளும் அதற்கு மீமாம்ஸாந்யாய புராண தர்மசாஸ்த்ராதிகளாகிற எட்டு உபாங்கங்கள் இருப்பதுபோல இதற்கும் மற்றையாழ்வார்கள் எண்மருடையவும் அருளிச் செயல்கள் உபாங்கங்களாயிருக்கும். அந்த வேதமானது தன்னுடைய அங்கோபாங்கங்களெல்லாவற்றிலும் தன் வைபவத்தாலே மேம்பட்டிருப்பதுபோல் இதுவும் திவ்யப்ரபந்தங்களெல்லாவற்றினுள்ளும் மேம்பட்டிருக்கும். அந்த வேதத்திற்கு நித்யத்வம் நிர்தோஷத்வம் அஸத்யாஹிதத்வம் ஆஜ்ஞாரூபத்வம் முதலிய ஏற்றங்களிருப்பதுபோல், இதற்கும் ❖முந்தையாயிரம்❖ அழிவில்லாவாயிரம்❖ என்னப்பட்ட நித்யத்வமும், ❖ஏதமிலாயிரம்❖என்னப்பட்ட நிர்தோஷத்வமும், ❖பொய்யில் பாடலாயிரம் ❖என்னப்பட்ட அஸத்யராஹித்யமும், ❖ஆணையாயிரத்து❖என்னப்பட்ட ஆஜ்ஞாரூபத்வமும் உள்ளன. ஆனாலும் ❖குருகூர்ச்சடகோபன் சொன்ன – சொல்லப்பட்ட ❖என்றுள்ள பல பாசுரங்களினால் ஆழ்வார் இதற்குக் கர்த்தாவாகச் சொல்லப்படுகிறாரேயென்னில்; அந்த வேதந்தன்னையும் ❖அநாதிநிதநா ஹ்யேஷா வாக் உத்ஸ்ருஷ்டா ஸ்வயம்புவா❖ என்று அத்தை நான்முகன் படைத்ததாகச் சொல்லியிருப்பதுபோல் இதனையுங் கொள்க. இரண்டிடத்திலும் ப்ரகாசகத்வமே விவக்ஷிதமாகையாலே நித்யத்வ அபௌருஷேயத்வங்களுக்கு ஹானியில்லையென்றுணர்க. ... ... ... ... ❖

### ரிஷிகளிற் காட்டில் ஆழ்வார்க்குண்டான வைலக்ஷண்யம் கூறுதல்

17. திருவாய்மொழியை வேதமாகக்கொள்வது தவிர. வேதோபப்ரும்ஹணமாக (அதாவது வேதவியாக்கியானமாகக் கொள்வதுமுண்டு. ஒன்றுக்கே வேதத்வமும் உபப்ர்ம்ஹணத்வமும் கூடுமோவென்று சங்கிக்கவேண்டா. *பாரத: பஞ்சமோ வேத:* என்றும் *வேதாந் அத்யாபயாமாஸ மஹாபாரத பஞ்சமாந்* என்றும் மஹாபாரதத்தை வேதமாகச் சொல்லுவது போல உபப்ர்ம்ஹணமாகவும் சொல்லுவதுண்டே: பாரதத்திற்கு உள்ளீடான கீதையை *பகவத்கீதாஸு உபநிஷத்ஸு* என்று உபநிஷத்தாகச்சொல்லுவதுபோல உபப்ர்ம்ஹணமாகவும் சொல்லுவதுண்டே. அதேபோல இங்கும் வேதத்வமும் உபப்ர்ம்ஹணத்வமும் உபபந்நமாகக் குறையில்லை — என்று முடிக்கப்படுகிறது. இதன்மேல், உபப்ர்ம்ஹணகர்த்தாக்களென்னுங் காரணத்தினால் ருஷிகளும் ஆழ்வாரும் ஒப்பர்கள் என்று நினைக்க நேரும். இப்படி நினைப்பது தவறு; ஆழ்வார்க்கும் ருஷிகளுக்கும் பர்வத பரமாணுவோட்டைவாசிபோரும் என்று நிரூபிக்கப்ராப்தமாக, அது நிரூபிக்கலாகிறது.

[சூர்ணை 55 முதல் 62 அளவாக.] மோஹசாஸ்த்ரப்ரவர்த்தகனென்று ப்ரஸித்தனான ருத்ரன் *சுடலையில் சுடுநீறன்* என்னும்படி ச்மசானத்திலே திரிந்து சவபஸ்மத்தை உடம்பெங்கும் பூசி எலும்பு மாலையைப்பூண்டு புலித்தோலுடுத்து எருதாண்டியாய் கூத்தாடியாய் விஷகண்டனாயிருக்குமவனென்று ப்ரஸித்தம். அன்னவன் *அறிவானும் ஆலமர நீழல் அறம் நால்வர்க்கன்றுரைத்த ஆலமமர் கண்டத்தரன்* என்று பொய்கையாழ்வார் பணித்தபடியும். *ஆலசிழற் கீழறநெறியை நால்வர்க்கு மேலையுகத்துரைத்தான்* என்று திருமழிசைப்பிரான் பணித்தபடியும் அகஸ்த்யர் புலஸ்த்யர் தக்ஷர் மார்க்கண்டேயர் என்கிற நால்வர்க்குப்ரவசனம் பண்ண, அந்த ருத்ரசிஷ்யர்களில் ஒருவனான புலஸ்த்யனுடைய வரப்ரஸாதம் பெற்றுப் பராசரர் புராணமெழுதினார். மற்ற ருஷிகள் திறத்தும் இங்ஙனமே கண்டு கொள்ளலாம். ஆழ்வாரோ வென்னில், *அயர்வறுமமரர்களதிபதியால் மயர்வற மதிநல மருளப்பெற்றவர்; *திருமாலாலருளப் பட்ட சடகோபன்* என்றுமுள்ளது. பெரியாழ்வாரும் *எயிற்றிடை மண்கொண்டவெந்தை யிராப்பகலோதுவித்து* என்றும், *பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகி வந்து* என்றும் பணித்தார். ஆக ருஷிகளுக்கு ஸ்வாசார்யநிகர்ஷப்ரயுக்த நிகர்ஷமும் ஆழ்வார்க்கு ஸ்வாசார்யோத்கர்ஷப்ரயுக்த உத்கர்ஷமும் உணரத்தக்கது. ஆழ்வார் மதியெல்லாமுள் கலங்கி மயங்கியும் மூவாறு மாஸம் மோஹித்தும் ஆடியாடி அகங்கரைந்து இசைபாடிப் பாடிக் கண்ணீர் மல்க நின்றும் கங்குலும் பகலும் கண்துயிலறியாதே கண்ணநீர் கைகளாலிறைத்தும் எங்கே காண்கேனீன்துழாயம்மான் தன்னை யானென்று வருந்தியேங்கியும் அலமந்திருந்தபடியை ஒரு ருஷியினிடத்திலும் காண முடியாது. காண நேர்ந்தால் புத்ரவியோகாதிதுக்கங்களிலே காணலாமத்தனை. பகவத்ஸம்ச்லேஷ விச்லேஷவார்த்தைகளை அவர்கள் கனாக்கண்டு மறியார்கள். இன்னமும் *வாதாம்பு பர்ணாசநா:* என்கிறபடியே காயோடுநீடுகனியுண்டு வீசுகடுங்கால் நுகர்ந்து உயிர்தரித்தவர்கள் ருஷிகள். *உண்ணுஞ் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாங் கண்ணனெம் பெருமானென்றேயிருந்தவர் ஆழ்வார். பகவத்ப்ராப்தி மாத்ரமே பலமாகவும் கர்மஜ்ஞானாதிகளே உபாயமாகவும், இந்த்ராதிதேவதாந்தர்யாமியான ஈச்வரனே உத்தேச்யனாகையாலே அந்த இந்த்ராதிதேவதைகளும் அநுவர்த்தநீயராகவும் பேசி வைத்தவர்கள் ருஷிகள். *ஒழிவில் காலமெல்லா முடனாய்மன்னி வழுவிலாவடிமை செய்கையே புருஷார்த்தமாகவும், அவன்தானே உபாயமாகவும், மறந்தும் புறந்தொழாதிருக்கையே ஸ்வரூபமாகவும் நிர்ணயித்தவர் ஆழ்வார்.

18. கிம் பஹுநா? மஹரிஷிகளும் ஆழ்வாருடைய அவதாரத்தைத் தெரிவித்துள்ளார்களென்பதைக் காணவேணும். (சூர்ணை 91.) ஸ்ரீ பாகவதத்தில் பதினோராவது ஸ்கந்தத்தில், *க்ருதாதிஷு நரா ராஜந் கலௌ இச்சந்தி ஸம்பவம், கலௌ கலு பவிஷ்யந்தி நாராயணபராயணா:.* என்று க்ருதயுகத்து மநுஷ்யர்கள் கலியுகத்தில் பிறக்கவேண்டிப் பரமபதம் செல்லாமலிருந்து கலியுகத்தில் ஸ்ரீமந்நாராயணபக்தர்களாய் ஜனிக்கப்போகிறார்களென்றுசொல்லி, அதற்குமேல் *க்வசித் க்வசிந் மஹாராஜ த்ரமிடேஷு ச பூரிச: என்று, அந்த நாராயணபக்தர்கள் அபூர்வமாகச் சிலசிலவிடங்களில் பிறப்பர்கள், தமிழ்நாடுகளில் விசேஷமாகப் பிறப்பர்களென்றும் சொல்லி, மேலே ✧தாம்ரபர்ணீ நதீ யத்ர க்ருதமாலா பயஸ்விநீ, காவேரீ ச மஹாபாக ப்ரதீசீ ச மஹாநதீ.✧ என்று தாமிரபர்ணி, வைகை, பாலாறு, காவேரி, ப்ரதீசீநதியென்று நதி விசேஷங்களையெடுத்துக்கூறி, அதற்குமேல் ✧யே பிபந்தி ஜலம் தாஸாம் மநுஜா மநுஜேச்வர, தேஷாம் நாராயணே பக்தி: பூயஸீ நிருபத்ரவா.✧ என்று கீழே சொன்ன தாமிரபர்ணி முதலிய நதிகளின் தீர்த்தத்தைப் பருகுமவர்களுக்கு நாராயணனிடத்தில் பக்திவெள்ளம்பெருகுமென்றும் சொல்லியிருப்பது குறிக்கொள்ளத்தக்கது. தாம்ரபர்ணிக்கரையில் நம்மாழ்வாரும் மதுரகவிகளும். வைகையாற்றுப்ராந்தத்தில் பெரியாழ்வாரும் ஆண்டாளும். பாலாற்றுப்ராந்தத்தில் முதலாழ்வார்களும் திருமழிசைப்பிரானும். காவேரிக்கரையில் தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார். ப்ரதீசீநதியின் அருகே குலசேகராழ்வார். ஆக நம் ஆழ்வார்கள் திருவவதரிக்கப்பெற்ற நதிகளையே மஹரிஷி நிர்தேசித்திருப்பது காண்க.

ஆசார்யஹ்ருதயப்பதினெட்டு முற்றிற்று.

---

## முக்கியமான விஞ்ஞாபனம்



ஸ்ரீவசநபூஷணஸாரம் ஆசார்ய ஹ்ருதயஸாரம் ஆசார்ய ஹ்ருதயப்பதவுரை முதலியன அடியேன் எழுதி வெளியிட்டிருந்தாலும் ப்ரக்ருதம் இந்த அஷ்டாதசார்த்தமஹாநிதியின் சைலியிலே ஸ்ரீவசநபூஷண ஸர்வஸ்வமென்றும், ஆசார்ய ஹ்ருதயஸர்வஸ்மென்றும் இரண்டு நூல்கள் எழுதி உத்தராயணத்தில் வெளியிடுவேன். அவற்றால் இரண்டு திவ்யக்ரந்தங்களிலுமுள்ள மஹார்த்தங்கள் குறையற வெளிவரும். இப்போது வெளியிட்ட பதினெட்டாலுண்டான அபர்யாப்தி தீரும்.

(ப்ர. அ. தாஸன்.

**Rgd. No. 2975** ஸ்ரீராமாநுஜன்

**மிக முக்கியமான அறிவிப்பு;**—நமது ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபை புத்துயிர்பெற்று நாலைந்து மாதங்களாகின்றன வென்பதும் இச்சபையின் மூலமாக ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய நூல்கள் பலவும் அச்சிடப்பட்டு வருகின்றனவென்பதும் உலகம் பரவியுள்ளது. ஆஸ்திகர்கள் பலரும் இச்சபையில் மெம்பராகச் சேரும்படி கோரப்படுகிறார்கள். இதற்குச் செலுத்தவேண்டிய வருடச்சந்தா ரூ. 25 மட்டுமே. 213 நெ. கோவிந்தப்பநாய்க்கன் தெரு, ஜி. டி. மதராஸ் - இந்த விலாஸத்தில் விவரங்கள் தெரிந்துகொள்க. ... ... ... .... ( )

நமது ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாய நூல்கள் கிடைக்குமிடங்கள்:—

(1) க்ரந்தமாலா ஆபீஸ், சின்ன காஞ்சீபுரம்.

(2) M. A. KRISHNAMMAL, Advocate,
20, South Mada Street, Triplicane, Madras-5.

(3) A. RAMANUJACHARI, B. A.,
A 230 E. Type, Pandara Road, New Delhi.-11.

(4) S. R. SRINIVASAYYANGAR,
11/5, ஐஸ்ஹௌஸ் ரோட், திருவல்லிக்கேணி.

---

If un-delivered please return to:

**P. B. ANNANGARACHARYA,**
L. KANCHEEPURAM.

---






To. Sri. Vangeepuram Raghavacharya,
MELKOTE :(Mysore).

---

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.
Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, L. Kanchipuram.